# கவிச்சுவையும்
# நகைச்சுவையும்

UNIVERSITY EXTENSION LIBRARY
16 DEC 1957
MADURAI

வித்வான் பாலூர் கண்ணப்ப முதலியார்,
தமிழ்விரிவுரையாளர்
புதுக்கல்லூரி — சென்னை.

UNIVERSITY LIBRARY
31 MAY 1957
MADRAS

UNIVERSITY EXTENSION
LIBRARY, MADURAI

ஸ்டார் பிரசுரம்

திருவல்லிக்கேணி
சென்னை-5.

மேலக்கோபுரத் தெரு
மதுரை.

# பதிப்புரை

—:o:—

தமிழ் இலக்கிய வரிசையிலே தனிப்பாடல்கள் சிறந்த ஒரு அம்சமாகும். காவிய, புராண, இதிகாசங்களைப் போன்ற பெரும் நூல்கள் எத்துணைச் சிறப்புடைத்தோ அத்துணைச் சிறப்புடையது இத் தனிப்பாடல்களும். இப்பாடல்களும் தொகுக்கப் பெற்று நூல்வடிவினதாகத் தமிழில் வெளியிடப் பெற்றுள்ளன.

அந்நூலில் பல்வகைச் சுவைகள் மலிந்திருக்கின்றன. ஒவ்வொன்றும் அதனதன் தன்மையால் உயர்வு பெற்றுத் திகழ்கின்றன. அதில் மிக முக்கியமாகக் குறிப்பிடப் பெறவேண்டியது நகைச்சுவையே யாகும்.

உணவு, உடை முதலிய பொருள்கள் வாழ்க்கைக்குத் துணை அவசியமோ அத்துணை நகைச்சுவையும், சிரிப்பும் அவசியம் என்று இன்றைய வைத்திய நிபுணர்கள் கூறுகின்றனர்கள். இதனை முன்னரே யறிந்தன்றோ நம் தமிழ்ப் புலவர்கள் நகைச்சுவை நிறைந்த கவிதைகள் பலவற்றை நமக்களித்துள்ளார்கள். வெறும் நகைச்சுவையோடு மட்டுமின்றி அவை பொருள் நிறைந்ததாகவும் இருக்கின்றன.

மூப்பேரும் பெற்ற மோரையும், சோறுகண்ட மூளியையும், அத்தமிக்கும்போது வரும் அரிசியையும் நாம் மறந்துவிட முடியுமா? அவை நம் உள்ளத்தில் படியும் அரிய கவிதைப் பொக்கிஷங்கள் அல்லவா?

இந்நூலில் பாட்டுக்களை எடுத்துச் சொல்வதோடு மட்டுமின்றி அப்பாடல்கள் பிறந்த வரலாறு சூழ்நிலை அவற்றின் உட்கருத்து அப்பாடல்கள் பிறந்த தலங்கள் பற்றிய விளக்கங்களும் கதை சொல்லும் முறையில் மிகவும் நயம்பட எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

இதை வெளியிடும் வாய்ப்பை எங்கட்களித்த வித்வான் பாலூர் கண்ணப்ப முதலியார் அவர்கட்கு எங்கள் நன்றி.

ஸ்டார் பிரசுரம்

......o......

UNIVERSITY EXTENSION LIBRARY
MADURAI

# ஆசிரியர் முன்னுரை

—:o:—

ஆங்கிலம் படித்த சில அறிஞர்கள் தாம் தமிழில் போதுமான அறிவு பெற்றிராத காரணத்தால் ஆங்கிலத்தில் உள்ளதுபோல் தமிழில் நகைச்சுவைக்குரிய கவிகளும் கற்பனைகளும், எளிய செம்பாகமான பாடல்களும் இல்லை என்று கூறிவருவதைச் சிலர் அறிவர். அவர்கள் அவ்வாறு கருதுவது அவ்வளவு பொருத்தமில்லை. நகைச் சுவை தமிழ் நூல்களில் இடம் பெறுவதில்லை என்றால் நம் முன்னோர்களான இலக்கணப் பெரும் புலவர்கள் எண்வகை மெய்ப்பாட்டில் நகை என்னும் ஒரு மெய்ப்பாட்டை எடுத்துக் கூறி இருக்க மாட்டார் அன்றோ? நகைச்சுவை புராண இதிகாச, காவியங்களில் நிரம்பித்தான் இருக்கின்றன. ஆனால் அவை தமிழில் ஆழ்ந்த அறிவு அடைந்து பொருட்சுவையைத் தெரிந்தவர்கட்கே புலனாகும். எல்லோருக்கும் ஆங்கில நூல்களில் உள்ள நகைச்சுவையை அறிந்து இன்புற இயலாமல், ஆங்கில அறிவு நன்கு அமையப்பெற்றவர்கட்கே அவ்வின்பத்தைச் சுவைக்க இயல்வது போலவே, தமிழில் புலமை பெற்றவர்க்குத்தான் காவிய, நகைச்சுவைகளைத் தெரிந்து இன்புற இயலும். ஏனெனில் அச்சுவை அந்நூல்களில் இலைமறைகாய் போல் அமைந்திருக்கின்றது.

ஆனால், தமிழில் தனிப்பாடல் என்னும் ஒரு தொகுப்பு நூல் உண்டு. அந்நூலில் பற்பல புலவர்கள் அவ்வப்போது பாடிய பாடல்கள் தொகுக்கப் பட்டுள்ளன. அவை எளிய இனிய சொற்களைப் பெற்றுப் பொருள் நயம் நன்கமையப் பெற்று நகைச்சுவைக்கு ஒரு சிறந்த இலக்கியமாக இயங் கிக் கொண்டிருக்கின்றன.

இங்கு இந்நூலைப் படிப்போர் நகைச்சுவையை சுவைக்கப் பெறாமல் இரார். துன்ப நிலையில் சோர் வுற்றிருப்பவரும். இந்நூலைக் கையில் எடுத்து வாசிப் பின் இன்ப நிலை எய்துவர் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. அதனைக் காண விரும்புவோர் வாசித் துக்காண்க.

இங்ஙனம்

பாலூர் கண்ணப்ப முதலியார்.

---

## பொருளடக்கம்.

—:0:—

# வாரணத்தை எலி இழுத்துப்போகின்றதென்?

—:o:—

யானையை நீங்கள் பார்த்திருக்கிறீர்கள் அல்லவா? அதனை வாரணம் என்றும் கூறுவர். அது முறம் போன்ற காதுகளும், உலக்கை போன்ற தும்பிக்கையும், உரல் போன்ற கால்களையும், மலைபோன்ற உருவத்தையும் உடையது. இதனால் அவ்விலங்கு உருவத்திலும் உடல் பலத்திலும் மிகுந்தது என்பது தெரிகிறதல்லவா? யாராகிலும் உடல்கட்டும், உரமும் உடையவர்களாய் இருந்தால் அவர்களை நாமும் என்ன சொல்லுகிறோம்? 'அவன் ஆனைக்குட்டி மாதிரி இருக்கிறான்' என்றல்லவா சொல்லுகிறோம்.

எலியைப் பற்றி உங்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை. யானையை சர்க்கஸுக்கோ, மிருகக்காட்சிச் சாலைக்கோ பெரிய கோவில்களில் நடக்கும் திருவிழாக்களுக்கோ போகும்போது பார்க்க நேரிடும். எலியை அப்படித்தேடிப்போய்ப் பார்க்கவேண்டியது இல்லை அல்லவா? அதை நம் வீட்டில் அடிக்கடி பார்க்கிறோம். அதன் உருவத்தைப் பற்றி வர்ணிக்க வேண்டியதில்லை. அதுசிறிய உருவ முடையது. யானையின் உருவத்தோடு எலியின் உருவத்தை ஒத்திட்டுப் பார்த்தால் ஏரிக்கும் மடுவுக்கும் எவ்வளவு வித்தியாசம் கூறமுடியுமோ அவ்வளவு வித்தியாசம்

கூறலாம். உருவத்தைப் போலவே உரத்திலும் யானையோடு ஒத்திட்டுப்பார்க்க நம் மனம்தான் முன்வருமா? அப்படிப்பட்ட எலி யானையைத் தன் இஷ்டப்படி இழுத்துக் கொண்டு போகிறது என்றால் நீங்கள் சிரிக்காமல் என்ன செய்வீர்கள்?

ஆனால் உங்களில் சிலருக்கு எலி எப்படி யானையை இழுத்துக் கொண்டு போக முடியும் என்ற எண்ணம் கொண்டு இருக்கிறீர்கள். இதோ நான் காட்டுகிறேன் பாருங்கள்.

பிள்ளையார் உருவத்தை நீங்கள் இப்பொழுது நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். இவருக்கு முகம் மட்டும் யானை முகமாக இருக்கும் அல்லவா. அதனால் இவரை ஆனைமுகன் என்று அழைப்பர். இவருக்குரிய வாகனம் பெருச்சாளி. பெருச்சாளி எலியின் இனத்தைச் சேர்ந்தது தானே. முருகன் மயிலையும், சிவபெருமான் காளையையும், திருமால் கருடனையும், இப்படியே ஒவ்வொரு தெய்வங்களும் நல்ல வாகனங்களைக் கொண்டு ஊர்ந்து போக, விநயகர் மட்டும் ஏன் பெருச்சாளியை வாகனமாகக் கொண்டு இருக்கவேண்டும் என்று கூட நீங்கள் நினைப்பீர்கள்.

விநயகர் எப்பொழுதும் முன் யோசனைக்காரர்; புத்தி கூர்மை யுள்ளவர். எதிலும் சாக்கிரதையாகவே நடந்து கொண்டு காரியத்தை வெற்றியோடு முடித்துக் கொள்பவர். இவருடைய புத்தி கூர்மைக்கு ஒரு செய்தியைக் குறிப்பிடுகிறேன் பாருங்கள்.

சனி பகவான் எல்லாரையும் பிடித்து ஓர் ஆட்டு ஆட்டுபவன் அல்லவா? அவன் விநயகரையும் ஒரு கை பார்க்க வேண்டும் என்று வந்தானும், வந்து பிள்ளையாருக்கு ஒரு கும்பிடு போட்டு, சுவாமி "நான் என் கடமையைச் செய்யவேண்டும் உங்களையும் நான் பிடித்து விடவேண்டும்" என்று பணிவாகத்தான் கேட்டான். கலியின் பேச்சில் இவர் மயங்கி விடுவாரா? கணபதி சிறிதும் மனம் தளராமல், "சனிபகவானே! ஆமாம் ஆமாம் நீ உன் வேலையை ஒழுங்காகச் செய்ய வேண்டும். மனிதர்களையும் தேவர்களையும், பிடித்து ஆட்டிவைக்கின்ற நீ என்னையும் பிடித்துத்தான் ஆக வேண்டும். ஆனல் இன்றைக்கு வேண்டாம் நாளைக்குவா, என்னைத் தொடர்ந்து கொள்" என்று சொன்னராம். சரி நாளைக்கே வருகிறேன் என்று சனி புறப்பட்ட போது, கணபதி சனீஸ்வரனைப் பார்த்து 'நான் நாளைக்கு வருகிறேன்' என்பதைச் சுவரில் எழுதிவிட்டுப்போ, அப்பொழுது தான் எனக்கு ஞாபகம் இருக்கும் என்று கூறினர். அவ்வாறு சொல்லியதன் உட்கருத்தை அறியாத மந்தன் அப்படியே சுவரில் நான் நாளைக்கு வருகிறேன் என்று எழுதிவிட்டுச் சென்ருன். சென்றவன் மறு நாள் விநயகரிடம் வந்து வணங்கி நிற்க, பிள்ளையார் சுவரைக்காட்டி நீ எழுதியபடி நடந்து கொள் என்று கூறினர். சனி புருஷன் இன்னது செய்வது என்று அறியாதவனய் விநயகரைத் தொடர்வதை மறந்து விட்டனனும். பார்த்தீர்களா விநயகரது சாமர்த்தியத்தை. அது போலவே இவர் பெருச்சாளி

யை வாகனமாகக் கொண்டதற்குக் காரணம் வைத்திருந்தார். விநாயகரைத் தேவர்களே வணங்கிப் பிள்ளையாரே நீங்கள் நல்ல வாகனங்களை எல்லாம் தள்ளி விட்டு ஏன் எலி வாகனத்தை ஏற்றுக்கொண்டீர் என்று கேட்டபோது, நான் தொப்பையும் தொந்தியுமாய் இருக்கிறேன். என்னால் உயர ஏறவும் இறங்கவும் முடியாது. அதனால் எலியை வாகனமாகக் கொண்டால் சுலபமாக ஏறிக் கொள்ளலாம். எலி வேகமாக ஓடும்போது கீழே தள்ளினாலும் அப்படியே அந்தத் தள்ளிய இடத்தில் உட்கார்ந்து விடலாம் அல்லவா என்று சொன்னாராம். அதனால்தான் பிள்ளையாருக்கு எலிவாகனமாயிற்று. அதனால்அவரும் ஆகுவாகனன் என்னும் பெயரையும் பெற்றார்.

காளமேகப் புலவர் ஒரு ஊர் வழியே வந்து கொண்டிருந்தார். அப்போது அவ்வூர்ப்பிள்ளையார் கோவிலில் உள்ள பிள்ளையாரை நன்கு அலங்காரம் செய்து, மூஷிக (எலி) வாகனத்தில் வைத்துத் தூக்கிக் கொண்டு வந்தனர். அக் காட்சியைக் கண்ட புலவருக்கு ஒரு கவி பாட வேண்டும் என்று எண்ணிப் பாடி முடித்தார். அவர் எண்ணத்தில் மூஷிகவாகன சேவை, எலி யானையை இழுத்துக்கொண்டு போவது போல் விழுந்தது. அதைக் கண்டு துணுக் குற்றவர் போல் இந்த எலியை அடித்து யானையை மீட்பார் இல்லையா? சிவபெருமான் கையில் இருந்த மழுவும், திருமாலின் சக்கரமும், பிரமனது கதையும் எங்கே போயின? அவற்றை யாரேனும் திருடிக் கொண்டு போய் விட்டனரோ? அவ்வாயுதங்கள் இல்லாமை

யால்தான், வன்மையும் மும்மதமும் உடைய யானையை எலி தைரியமாக இழுத்துக் கொண்டு போகிறது என்ற கருத்துப்பட,

> மூப்பான் மழுவும் முராரி திருச்சக்கரமும்
> பாப்பான் கதையும் பறிபோச்சே—மாப்பார்
> வலி மிகுத்த மும்மதத்து **வாரணத்தை ஐயோ**
> **எலி எழுத்துப் போகின்ற தென் ?**

என்று பாடி முடித்தார். (வாரணம்—யானை)

—:o:—

# வால் எங்கே? நீண்ட வயிறெங்கே?

'பாண்டி நாடே பழம் பதியாகவும்' என்னும் தொன்று தொட்ட பெருமையுடையது. இந்நாட்டுத் தலை நகரமாகிய மதுரையே தமிழ் வளர்த்த இடமும், சங்க நூல்கள் பலவற்றை வெளியிட்டயிடமும் ஆகும். இச் சங்கத்தில் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளும், குன்றம் எறிந்த கொற்றவேல் குமரனும் புலவர்களாய் இருந்தார் எனில், இச்சங்கத்தின் புலமை கூற வேண்டுமோ? இந்நாடு பாண்டியர்களால் அரசாளப் பட்டு வந்த காலம் போகப் பிற்காலத்தே நாயக்கரது ஆட்சிக்கு உட்பட்டது. அவ்வாறு ஆட்சி புரிந்த அரசர்களில் திருமலை நாயக்கர் என்பவர் ஒருவர்.

திருமலை நாயக்கர் தம் சமஸ்தானத்தில் பல தமிழ்ப் புலவர்களை வைத்து ஆதரித்து வந்தார். அவர்களில் ஒருவர் அதிமதுரகவி என்பவர். அவர் அருபத்து நான்கு கலைகளைப் பெற்றவர். அதனுல் அவருக்குச் சிறப்பு அதிகம் ஏற்பட்டிருந்தது. திருமலை நாயக்கரும் அவருக்குப் பல்லக்கு, விருதுகள் முதலான சிறப்புக்களையும் ஈந்திருந்தார். அவர் கலை பல வல்லவராய் இருந்தமையால் சிஷ்ய கோஷ்டிகள் பலரும் அவரை அணுகிக் கலை பயில்வார் ஆயினர். இவ்வளவு சிறப்புத்தான் பெற்றிருந்தும் சான்

ஞர்க்கு அழகு கற்றுணர்ந்தடங்கல் என்னும் பண்பு அமையப் பெருமல் தம்மைவிடக் கலையில் சிறந்தவர் இல்லை என்னும் கர்வங் கொண்டிருந்தார். நல்ல காலம் இருக்கும் வரையில் அதிமதுரகவியின் பெருமை வளர் பிறை போல் தனக்கு யாதொரு அவமானமும் நேரா வண்ணம் இருந்து வந்தது. அதிமதுரகவியின் போருத காலமாகக் காளமேகப் புலவர் மதுரைக்கு வந்து சேர்ந்தார். அதிமதுர கவியின் சிறப்பையும் செருக்கையும் கேள்வியுற்ருர். சிறப்பைப் பற்றிக் காளமேகப்புலவர்க்குச் சந்தோஷமே. தம்மினத்தவர் சிறப்புத் தமக்கு வந்த சிறப்பாக எண்ணினர். ஆனல் அதிமதுரகவியின் செருக்குத்தான் காளமேகப் புலவருக்குப் பிடிக்கவில்லை. அதை அடக்க மனங் கொண்டார்.

திருமலை நாயக்கர் தம் ஆஸ்தான கவிகளுடன் அரச சபையில் வீற்றிருக்கிருர். அந்தச் சமயம் காளமேகப் புலவர் உள் நுழைந்தார். அதிமதுரகவிராயர் செருக்குடன் சிறக்க வீற்றிருப்பதையும், அவரைச் சுற்றி மாணவர் கூட்டம் அமர்ந்திருப்பதையும் கவனித்தார். அவர்கள் யாவரும் புலவர்கள் என்பது காளமேகம் அறியாதவர் அல்லர், என்ருலும் வெறும் வாயை மெல்வதை விடச் சிறிது அவலும் கிடைக்கப் பெற்ருல் அதைச் சேர்த்து மெல்வது எவ்வளவு சுவையாக இருக்கும்? ஆகவே ஒரு கேள்வியைப் புலவர்களை நோக்கி எழுப்பினர், 'ஐயா! நீங்கள் எல்லாம் யாரோ?' என்று வினவினர்.

அவர்கள் யாவரும் சிறிதும் தாமதியாமல் **நாங்கள் யாவரும் கவிராயர்கள்** என்று சேர்ந்து கூறினர். அவர்கள் கவிராயர்கள் என்று தம்மைச் சொல்லிக் கொண்டது, தாம் தாம் ஒருவரும் புலவர்களுக்குள்ளே அரசராய் விளங்குபவர் என்னும் பொருளில் ஆகும். (கவி = புலவர்; ராயர்கள் = அரசர்கள்) காளமேகப் புலவருக்குச் சொல்லவா வேண்டும்? அவர் சமயோசித அறிவு படைத்தவர். எந்தச் சொல்லேயும் தொடரை யும் திரித்துப் பொருள் தரத்தக்க நிலேயில் பாடவும், பேசவும் வல்லவர். இதுதான் இவர்களேயும் இவர் களது தலைமைப் புலவரையும் அடக்குதற்குத் தகுந்த சமயம் என்று தீர்மானித்து, கவிராயர் என்னும் தொடர்க்குப் புலவர்கட்கு அரசர்கள் என்னும் பொருளில் எடுத்துக் கொள்ளாமல் வேண்டுமென்றே இவர்களே அவமானம் செய்தற் பொருட்டு குரங்கு கட்கு அரசர்கள் என்னும் பொருளேத்தாம் கற் பித்துக் கொண்டு (கவி = குரங்கு, ராயர் = அரசர்) அப்புலவர்களேப் பார்த்து, 'ஐயா நீங்கள் உங்களேக் கவிராயர் (குரங்குகட்கு அரசர்) என்று கூறிக் கொண்டால் உங்களிடத்தில் அக்குரங்குகட்குரிய வாலேக்காணேமே, நீண்ட வயிறைக் காணேமே, முன் வந்துள்ள இரு கால்களேக் காணேமே, உள்ளே குழிந்த கண்களேக் காணேமே இவைகள் எல்லாம் எங்கே? என்னும் பொருள் தொனிக்கவும் அவர்கள் தம்மைக் கவிராயர் என்று கூறிக் கொள்ளாமல் புலவர்கள் என்று சொல்லிக் கொள்ள வேண்டும் என்னும் அறிவு ஊட்டவும்,

வால் எங்கே? நீண்ட வயிறெங்கே? முன் இரண்டு
கால் எங்கே? உட் குழிந்த கண்ணெங்கே—சாலப்
புவிராயர் போற்றும் புலவீர்காள்! நீவிர் கவிராயர்
என்றிருந்தக் கால்.

என்று பாடினர்.

இப்பாடலைக் கேட்ட திருமலை நாயக்கரும், மந்திரி பிரதானியர்களும் சபையில் உள்ளவர்களும் வயிறு குலுங்கக் குலுங்க நகைத்தனர். அதிமதுரகவியும் அன்னார் மாணவர் கூட்டமும் வெட்கித் தலை குனிந்தனர்.

—:o:—

# பருந்தெடுத்துப் போகிறதே பார்

—:::—

பஞ்ச பூத ஸ்தலங்கள் என்று புகழப்படும் திருப்பதிகள் ஐந்து. அவை காஞ்சீபுரம், திருவானைக்கா, திருவண்ணாமலை, திருக்காளத்தி, சிதம்பரம் என்பன. இவ்விடங்களில் பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாச வடிவமான லிங்கங்கள் முறையே பொருந்தியுள்ளன. இந்த உண்மையை இன்றும் காணலாம். காஞ்சீபுரத்திலுள்ள லிங்கம் பிருதுவி லிங்கம் அதாவது மண் லிங்கம். திருவானைக்காவில் உள்ள லிங்கம் அப்பு லிங்கம் அதாவது தண்ணீர் லிங்கம். இப்பொழுதும் திருவானைக்கா மூலஸ்தானத்தில் லிங்கம் நீரால் நிரம்பப்படுவதும், அந்நீர் அர்ச்சகர்களால் பூசை வேளைக்கு மொண்டு மொண்டு அகற்றப்படுவதும் காணலாம். திருவண்ணாமலையில் இருக்கும் இலிங்கம் தேயு லிங்கம் அதாவது அக்கினி லிங்கம். அதனை அக் கோவில் மூலஸ்தானத்தில் சென்றால் தணல் வீசுவதை நன்கு உணரலாம். திருக்காளத்தியில் இருப்பது வாயு லிங்கம். அதாவது காற்று வடிவான லிங்கம். அதனை மூலஸ்தான லிங்கத்தின் அருகில் இருக்கும் திரி விளக்கு எப்பொழுதும் அசைந்து கொண்டிருப்பதினின்றும், அறியலாம். மூலஸ்தானத்திற்குச் சற்று விலகி

இருக்கும் விளக்குகள் இவ்வாறு எந்த நேரமும் அசைந்து கொண்டிரா. சிதம்பர லிங்கம் சிதாகாச லிங்கம். ஆகாசம் என்பது வெட்ட வெளிதானே. அதைத்தான் சிதம்பர ரகசியம் என்று காட்டி வருகின்றனர். இந்தக் குறிகள் யாவும் இறைவன் மண், நீர், நெருப்பு, காற்று, வெளி என்னும் ஐந்து வடிவினனுய் உள்ளவன் என்பதை அறிவிப்பதற்காக இயற்கையில் அமைந்த அமைப்பாகும்.

இப் பஞ்ச பூதஸ்தலங்களில் ஒன்றே காஞ்சிமா நகரம். காஞ்சிபுரத்தின் சிறப்பு வெகுவாக நூல்களில் புகழப்பட்டிருக்கின்றன. முத்திதரும் நகரேழில் முக்கியமாம் காஞ்சி என்றும் கற்றவர் பயிலும் காஞ்சிமா நகர் என்றும் கூறுவர். இக் காஞ்சி பல்லவ அரசர்கட்குத் தலை நகரமாகும்.

இக் காஞ்சிமா நகரில் சைவ வைணவர்கட்கு உரிய கோயில்கள் பல. அவற்றுள் பல சைவ சமயாசிரியர்களாலும், வைணவ சமயாசிரியர்களாலும் பாடப்பட்ட பெருமை வாய்ந்தவை. காஞ்சி காமகோடி பீடம் அங்குதான் உண்டு.

இக் காஞ்சிமா நகர் பெரிய நகராகத் திகழ்வதால் இதனை இரண்டாகப் பிரித்தும் கூறுகின்றனர். அவையே பெரிய காஞ்சி சிறிய காஞ்சி என்பன. பெரிய காஞ்சியில் ஏகாம்பர நாதர் கோயிலும், காமாட்சியம்மன் கோயிலும், குமரக் கோட்டமும் மிகப் பிரசித்தி பெற்றவை. இவ்வாறே சின்னக்

காஞ்சியில் வரதராஜப் பெருமாள் ஆலயம் சிறப்புடையது. இந்தக் காரணத்தால் பெரிய காஞ்சியைச் சிவ காஞ்சி என்றும்; சின்னக் காஞ்சியை விஷ்ணு காஞ்சி என்றும் கூறுவர்.

இத்தகைய சீரும் சிறப்பும் புகழும் வாய்ந்த காஞ்சிமா நகருக்குக் காளமேகப்புலவர் வந்துற்றார். அவர் வந்த காலம் நல்ல கோடை காலம். வைகாசி மாதம், வைகாசி மாதத்தில் வரதராஜரது திருவிழா அவ்வூரில் பெருஞ் சிறப்புடன் நடைபெறும். இந்த விழாவிற்கு வரும் சனங்களை அளவிட்டு உரைக்க முடியாது. அதிலும் கஞ்சி வரதரது கருட சேவைக்கும் தேர் விழாவிற்கும் திரளும் கூட்டம் சொல்லத்தரமன்று.

காளமேகம் கருட சேவை யன்று வரதரைப் பார்த்தார். வரதராஜப் பெருமாள் தங்க முலாம் பூசப்பட்ட கருடவாகனத்தின் மீது அலங்காரத்தோடு புறப்பட்டுக் கொண்டிருக்கிறார். எல்லோரும் வரதா வரதா வரதா என்று வாய் விட்டுக் கூறித் தம் இருகரங்களையும் தலைமேல் குவித்து வணங்கிக் கொண்டிருக்கின்றனர். இந்தச் சமயத்தில் காளமேகப் புலவர், கூட்டத்தில் கலந்து கொள்ளாமல் சற்று விலகி நின்று கொண்டு, உரத்த குரலில் பெருமாள் என்னவோ, நல்ல பெருமாள்தான், இவருடைய திரு நாளும் நல்ல திரு நாள்தான். இவர் ஏன் வெளியே வர வேண்டும் இருந்த இடத்திலேயே உள் இருக்கக் கூடாதா? அப்படி இல்லாமல் வெளியே

புறப்பட்டதனுல்தான் பாவம் பருந்து அவரைத் தூக்கிக் கொண்டு போகிறது. நான் சொல்வது பொய்யாக இருந்தால் இதோ பாருங்கள் என்று பக்கத்தில் இருந்தவர்கட்கும் காட்டித் தம் கரத்தைத் தலைமேல் தூக்கினர். எல்லோரும் பெருமாளையும் புலவரையும் பார்த்து இவர் மகா குறும்புக்காரர் போலும் என்று தம் பக்திப் பரவசத்தையும் மறந்து வயிறு வெடிக்கச் சிரிக்கலாயினர். அந்தச் சமயத்தில் காளமேகம் பாடிய பாட்டுத்தான்.

பெருமாளும் நல்ல பெருமாள் அவர் தம்
திருநாளும் நல்ல திருநாள்—பெருமாள்
இருந்த இடத்தில் சும்மா இராமையால் ஐயோ
**பருந்தெடுத்துப் போகிறதே பார்!**

என்பது.

———

# திருக்குடந்தைக் கோட்டானே!

---

ஒழுங்கு என்பது மக்கட்கு இருக்க வேண்டிய குணங்களில் ஒன்று. ஒழுங்கு உடையவரே உயர்வடைவர். ஒழுங்கு அற்றவர் தாழ்வே அடைவர். இக்குணத்தை எங்கும் மேற்கொள்ள வேண்டும். செல்வரிடத்து ஒழுங்காக நடக்க வேண்டும், சிறந்த அறிவாளிகளிடத்து ஒழுங்காக நடக்க வேண்டும், நம்மினும் பெரியவர்களிடத்து ஒழுங்காக நடக்க வேண்டும் என்று மட்டும் கருதி ஒழுங்கை மேற்கொள்ளலாகாது. எவ்விடத்தும் எவரிடத்தும் ஒழுங்காக நடந்து கொள்ள வேண்டும்.

உலக இயற்கையும் கூட ஒழுங்காகத்தான் நடந்து கொள்கிறது. சூரியன் காலையில் தோன்றி வருவதும், பருவ மழை காலத்தில் பெய்வதும் எதைக் குறிக்கிறது? ஒழுங்கை அன்றோ குறிக்கிறது. சூரியன் காலையில் புறப்படும் ஒழுங்கை மீறினல் என்னகும் என்பதையும் பருவ மழை பெய்யாமற் போனல் உலகம் என்ன பாடுபடும் என்பதையும் கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள். ஆகவே எல்லாம் ஒழுங்கு என்னும் கோட்டில் நடப்பதனல் தான் உலகம் நடைபெறுகிறது.

நாம் சாப்பிடும் போதும் ஒழுங்காகச் சாப்பிட வேண்டும். இது கூடவா ஒழுங்காக இருக்கவேண்டும் என்று நினைக்கிறவர்களும் உண்டு, இங்கும் ஒழுங்கை மேற்கொள்ள வேண்டும் என்பதை அவ்வளவு முக்கியமாகக் கருதி இருந்ததனல் அல்லவா ஆசாரக் கோவை ஆசிரியர் அது பற்றி ஒரு பாட்டை நினைவோடு சொல்ல வேண்டிய பொறுப்பு அவருக்கு ஏற்பட்டது. அவர் உணவு உட்கொள்ளும் முறையைப் பற்றிப் பாடிய பாடல் மிக்க அழகானது.

சாதாரணமாக அவர் அவர் வீட்டில் உணவு கொள்ளும் போதே மிக ஒழுங்குடன் நடந்து கொள்ள வேண்டுமென்ருல் பலரும் வரிசையாக அமர்ந்து விருந்துணவு கொள்ளும் போது எவ்வளவு எச்சரிக்கையோடு ஒழுங்காக நடந்து கொள்ள வேண்டும்? இந்த ஒழுங்கைக் கடைப் பிடிக்காத ஒருவர் அடைந்த அவமானத்தைப் பாருங்கள்.

கும்பகோணத்தில் ஒரு பெரு விருந்து நடந்தது. அவ்விருந்து நால் வகை உண்டி, அறுவகைச் சுவையோடு ஏற்பாடு செய்திருந்தது. இவ்வளவு சிறந்த விருந்தில் பலரும் வரவழைக்கப் பட்டிருந்தனர். அவர்களில் ஒருவர் காளமேகப்புலவர். எல்லோரும் பந்தி பந்தியாக (வரிசை வரிசையாக) அமர்ந்திருந்தனர். காளமேகப்புலவர் பக்கத்தில் சோழியமரபினர் ஒருவரும் அமர்ந்திருந்தனர். அச் சோழியர் முன் குடுமி உடையவர், அதாவது பின் கழுத்துப் பக்கம் முடிந்திராமல் முன்பக்கம் முடிந்து மண்டையில்

பொருந்த வைத்திருத்தல். இம் மூன் குடுமி அழகைச் சிதம்பர தீட்சதர் பால் சிறக்கக் காணலாம்.

உணவு பறிமாறப்பட்டது. உணவோ முப்பழ முடன் சுவை மிக்குடையதாய் இருந்தது. எல்லோரும் உண்டு கொண்டிருந்தனர். சோழியர் உண்ணும் போது, அவரது குடுமியின் சுருக்கு அவிழ்ந்து அவர் உண்ணும் உணவில் தொங்கியது. அது நீண்ட முடி யாக இருந்தமையால் அதில் சோற்றுப் பருக்கைகள் ஒட்டிக் கொண்டன. ஒட்டினல் என்ன பக்கத்தில் தம்மைப் போல உண்டு சொண்டிருக்கின்றனரே அவர்கள் உணவிற்குக் குந்தகம் ஏற்படாமல் நடந்து கொள்ளவேண்டும் என்னும் ஒழுங்கை அறிய வேண்டும் அல்லவா? தம் பக்கத்தில் இருப்பவரைப் பற்றிச் சிறிதும் கவலை கொள்ளாமல் சோற்றுப் பருக்கை ஒட்டிக் கொண்ட முடியை உதறினர். அவ் வுதறலால் அவ்வெச்சல் சோற்றுப் பருக்கைகள் காளமேகப் புலவர் இலையில் விழுந்து விட்டன. அவ்வளவுதான் காளமேகத்திற்கு வந்தது கோபம். யாருக்குத்தான் வராது. உண்ணும் சோற்றில் மண்ணைப் போடுவது போன்றதல்லவா சோழியனது செய்கை? உடனே காளமேகம் அந்தப் பெருஞ் சபையில் சோழியனை வைய ஆரம்பித்து விட்டனர்.

முன்னே முடியிட்ட குடுமி அவிழ்ந்த சோழி யனே! சோறு கண்டறியாதவன்போல் விழுந்துச் சோற்றைக் கண்டது வாரி வாரி வாயில் அடைத்து உண்பதால் சோற்றுப் பருக்கைகள் பக்கங்களில்

ஒட்டுண்ட வாயனே கும்பகோணத்து ஊமைக் கோட்டானே, நாயே, குரங்கே, உன்னையும் ஒருத்தி வேலையில்லாமல் பன்றி குட்டி போடுவதுபோலப் பூமியில் குழந்தையாகப் பெற்ருளே என்றெல்லாம் பொருள் படும்படி,

சுருக்கவிழ்ந்த முன்குடுமிச் சோழியா சோற்றுப்
பொருக்குலர்ந்த வாயா புலையா—**திருக்குடந்தைக்**
**கோட்டானே** நாயே குரங்கே உனையொருத்தி
போட்டாளே வேலையற்றுப் போய்.

என்று பாடினர். அங்கிருந்தவர்கள் எல்லாம் திடுக்கிட்டு என்ன என்ன என்று விசாரிக்க விஷயம் வெளி வந்தது. எல்லோரும் இதைக் கேட்டுச் சோழியனை வைகிறவர்கள் வைதனர். சிரிக்கிறவர்கள் சிரித்தனர்.

—:o:—

# முப்பேரும் பெற்றுயே!

—:o:—

ஓர் ஆண்டில் ஆறு பருவங்கள் உள்ளன. அவை அவ்வக்கால நிலைகளை யொட்டி எழுந்த பெயர்கள். அப்பருவ காலங்கள் கோடை, கார், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பன. இவற்றுள் மக்கள் பெரிதும் உணர்ந்து கூறிவரும் காலங்கள் இரண்டே. அவை கோடை, கார் என்பன. கோடைகாலத்தில் இளவேனில் முது வேனில் பருவங்கள் அடங்கிவிடும். அவ்வாறே கார் காலத்தில் முன்பனி, பின்பனிக் காலங்கள் அடங்கி விடும்.

இப்படிப்பட்ட காலப் பிரிவுகளில் ஒன்றுகிய கோடைகாலத்தில் காளமேகம் வெளியே தேச சஞ் சாரம் செய்துகொண்டிருந்தார். கோடை என்றுல் சொல்ல முடியாத வெப்ப மிகுந்த காலம். மண்ணும் விண்ணும் சுடும் காலம். கோடை காலமாகிய சித்திரை மாதத்தின் வெம்மையைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. கத்திரி என்னும் கடு நெருப்புப் போன்றவெம்மை தரும் காலம் அச்சித்திரை மாதம்.

கத்திரி நாட்கள் மிகவும் வெம்மை மிக்க நாட்கள் என்று கருதி அவ்வெம்மையால் தெய்வங்களும் தாங்க

முடியாத உஷ்ணத்தால் தவிக்கின்றன என்று கருதிய நம்மவர் மூலட்டான மூர்த்திகட்கு மேலே சீத கும்பம் என்னும் பெயரால் ஒரு குடத்தைக் கட்டி அதில்பனிநீர், பச்சைக்கற்பூரம் சந்தனம் வெட்டிவேர் முதலான குளிர்ச்சிதரும் பொருள்களை இட்டு அடியில் சிறு துவாரம் செய்து அத்துவாரத்தின் வழியே அச்சீதள நீர் சுவாமியின் சிரசில் ஒழுகிக்கொண்டிருக்கும் ஏற்பாட்டை ஆண்டுதோறும் செய்து வருகின்றனர். இதனைக் காண விரும்புவோர் கத்திரி காலங்களில் திருக்கழுக்குன்ற வேதகிரீஸ்வரர் மலைமீது சென்று காணலாம். அக்குடம் கத்திரி நாட்கள் கழிந்ததும் எடுத்துவிடப்படும்.

இவ்வாறு தெய்வங்கட்கும் தணலைக் கொடுக்கும் வெம்மை மிகுந்த நாள் என்றால் மக்களுக்கு அது எத்தனை வெம்மை தரும் என்று சிந்தித்துப்பாருங்கள். இந்தக் கோடைகாலம் ஒன்றில்தான் காளமேகம் வெளிக்கிளம்பினர்.

புலவர் வெயிலால் களைப்புற்றார். அவர் கையில் குடையும் இருந்தது. காலில் செருப்பும் இருந்தது. இருந்தாலும் என்ன? பகலோன் படுகிரணத்தின் முன் அவை அவ்வளவு பயன்படவில்லை. சிறிது களைப்பாறலாம் என்று ஒரு ஆலமரத்தடியில் சென்றார். அங்கு இவரைப்போலவே வெயிலின் கொடுமையைச் சிறிது தணித்துக்கொண்டு போகலாம் என்று பலர் இருந்தனர். தம் மேலாடை விரித்துப் படுத்துறங்கியவர் ஒருபால். பேசிக்கொண்டு காலங் கழிப்பவர்

ஒருபால். கதைகளைப் படித்துக் காலங்கழிப்பவர் ஒருபால் அங்கு கூடி இருந்தனர். ஆலமரம் அல்லவா? அண்ணல்யானை, அணிதேர், புரவி, ஆட்பெரும் படையொடு மன்னர்க்கிருக்க நிழலைக் கொடுக்கும் பரப்புடையதல்லவா? இந்த இடத்தில் காளமேகம் தாமும் சேர்ந்தார்.

கூட்டம் மிகுந்திருந்ததனல் அங்கு சென்ருல் தன் மோர்க்குடம் விலையாகும் என்று எண்ணங் கொண்ட இடைச்சி ஒருத்தி அங்கு வந்தாள். கோடை காலத்தில் மோர் சிறந்த பானம். குளிர்ச்சியும் தர வல்லது. உடலுக்கும் நன்மை தரவல்லது. இடைச்சி பேராசைக்காரி. கூட்டத்தைப் பார்த்தாளோ இல்லையோ நிரம்பப் பணம் சம்பாதிக்கவேண்டும் என்ற கருத்துக்கொண்டவளாய் அங்கு வருவதற்குமுன் கிணற்றருகில் சென்று மோரைத் தண்ணீர் ஊற்றிப் பெருக்கிவிட்டாள். நீர் கருக்கி (காய்ச்சி) மோரைப் பெருக்கி (நீர் ஊற்றிக் கலந்து) தான் சாப்பிட வேண்டும் என்பது வயித்திய முறை என்ருலும் அளவு மீறி எதையும் செய்யலாமோ? அளவு மீறினல் அமுதமும் விஷமாகாதோ? காளமேகம் களைப்புற்று, இளைப்புற்று வந்தவர் ஆதலின், தம் சோர்வுதீர மோரைப் பருகலாம் என்று மோர் வைத்திருந்த இடைச்சியின் அருகுவந்தார். காலணக் கொடுத்து மோர் கொடுக்கும்படி கேட்டார். ஆய்ச்சியும் ஒரு தகரக்குவளை நிறைய மோரை வார்த்துக்கொடுத்தனள். புலவர் மோரை வாங்கினர். சும்மா அதைப்

பார்த்தார். அம்மோர் அவருக்கு மோராகத் தெரிய வில்லை. நீராகவே தோற்றம் அளித்தது. சிறிது வாயிலும் ஊற்றிப் பார்த்தார். நீர்ச்சுவை மிக்கு மோர்ச்சுவை குறைந்தே காணப்பட்டது. புலவருக் குக் கோபம் ஒரு பக்கம். சிரிப்பும் ஒரு பக்கம்.

கோபம் அவ்வளவாகப் பிறருக்குப் புலனுகா தல்லவா? சிரிப்புத்தானே சட்டெனப் புலப்படும். புலவர் சிரித்ததைக்கண்ட இரண்டொருவர் இவர் மோரைக் கையில் வாங்கிக்கொண்டு அதனைப் பருகா மல் ஏன் சிரிக்கின்றனர் என்ற உணர்ச்சியோடு வந்து இவரை அணுகினர்.

புலவர் தாம் கையில் பிடித்திருந்த மோரைப் பார்த்து ஏ மோரே! நீ உண்மையில் மோர்தானு? உண்மையில் இல்லை. நீ, நீர்தான். நீயே முதலில் ஆகா யத்தில் மேகமாக இருந்தபோது கார் (மேகம்) என்னும் பெயரைப் பெற்ருய். ஆனுல் நீயே இந்த இடைச்சியின் கையில் இருப்பதனுல் மோர் என்று பெயரைப் பெற்றுவிட்டாய். ஒரே பொருளாகிய நீ மூன்று பெயரையும் சிறப்பாகப் பெற்று விட்டாய். உன்னைப்போலப் பெயர் பெற்றவர் யார்? உனக்கு இருக்கும் பேறே பேறு என்று மோர் நீரைப் புகழ் வது போல அம் மோர் நீராக இருக்கிறது என்பதை இழிவுபடுத்தி ஆய்ச்சிக்கு அவமானம் வரும் முறை யில் பாடத் தொடங்கி விட்டார். அப்பாடலே

காரென்று பேர்படைத்தாய் ககனத்துறும் போது
நீரென்று பேர்படைத்தாய் நெடுந்தரையில் வந்ததற்பின்
வாரொன்று மென்முலையா ராய்ச்சியர் கைவந்ததற்பின்
மோரென்று பேர்படைத்தாய் முப்பேரும் பெற்றாயே.

என்பது. இப்பாடலைக் கேட்டதும் அங்கு படுத்திருந்தவரும், கதைபடித்திருந்தவர்களும் மற்றவர்களும் ஒன்று கூடி மோரைப் பார்த்தும் பாட்டின் சுவையை உணர்ந்தும் சிரித்துக் களித்தனர். இடைச்சி வெட்கித் தலைகுனிந்து கொண்டாள்.

———

# சப்பைக்கால் அண்ணன்

தமிழர்கட் கமைந்த மாதங்கள் பன்னிரண்டு. அம்மாதங்கள் ஒவ்வொன்றிலும் ஒரு சிறப்பிருக்கும். அப்படிச் சிறப்புப் பெற்ற மாதங்களில் ஐப்பசி மாதமும் ஒன்று. இம் மாதத்தில் மூன்று சிறப்புக்கள் உண்டு. அவை தீபாவளிச்சிறப்பு, கேதாரவிரதச் சிறப்பு, கந்தர் சஷ்டிச் சிறப்பு என்பன.

இங்கு சஷ்டி விழாச் சம்பந்தமான விஷயத்தைப் பற்றிச் சிறிது கவனிப்போம். இவ் விழா முருகப் பெருமானுக்குரிய விழாக்களில் ஒன்றாகும். சஷ்டி என்பது ஐப்பசி அமாவாசைக்கு அடுத்த ஆறு நாள் சுப்பிரமணிய சுவாமி ஆலயங்களில் கொண்டாடப்படும் விழா. இந்த விழாவின் சிறப்பு யாதெனில் தேவர் முனிவர் முதலானவர்கட்குப் பெருந்துன்பம் இழைத்துவந்த சூரபதுமன் என்ற அசுரனை ஆறுவது நாள் முருகப்பெருமான் கொன்று முனிவர் முதலானவர்களது கவலையை ஒழித்த நாளாகும். இவ்விழாவின் சிறப்பைக் காண விழைவோர் நாகப்பட்டினத்திற்கு அருகில் உள்ள சிக்கல் என்னும் சீரிய பதிக்குச் சென்று சிங்கார வேலரது திருவிழாவைக் கண்டு களிப்பாராக.

இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த இந்த விழா ஒரு கிராமத்தில் இருந்த சுப்பிரமணியர் ஆலயத்தில் சிறந்த முறையில் அன்றிச் சாதாரண முறையில் கொண்டாடிக் கொண்டிருந்தனர். சுப்பிரமணியக் கடவுளை அலங்காரம் செய்து ஒரு தொட்டியில் அமரச் செய்து ஒரு சிறந்த தமிழ்ப்புலவரைக் கொண்டு கச்சியப்ப முனிவர் எழுதிய கந்த புராணத்தைப் பிரசங்கிக்குமாறு ஏற்பாடு செய்திருந்தனர்.

முதல் நாள் பிரசங்கம் தொடங்கப் பெற்றது. எங்கும் ஆரம்ப சூரத்துவம் காணப்படும் அல்லவா? கிராமவாசிகள் எல்லாம் பக்தி சிரத்தையோடு உட்கார்ந்து புராணிகர் கூறும் பிரசங்கத்தைக் கேட்டுக் கொண்டிருந்தனர்.

இந்தக் கிராமத்தின் வழியே கவி காளமேகப் புலவரும் சென்றுகொண்டிருந்தனர். கூட்டம் பெரிதாக இருந்தமையாலும் தமிழ்ப் பிரசங்கம் நடப்பதனாலும் முருகப்பெருமான் ஆலயமாக இருப்பதனாலும் அவ்விடத்தைப் புலவரும் அணுகித் தாமும் கூட்டத்தில் ஒருவராகப் பிரசங்கத்தைக் கேட்டுக்கொண்டிருந்தார்.

முதல் நாள் பிரசங்கமாகையால் பிரசங்கியார் முகவுரையாகச் சில பேசத் தொடங்கினர். அம் முகவுரையில் முருகப் பெருமானது பெருமைகள் தொகுத்துக் கூறப்பட்டு வந்தன. முருகு என்னும் சொல்; அழகு, மணம், இளமை, இறைமை என்னும்

பொருளுடையது. ஆகவே முருகன்தான் என்றும் அழகனாகவும் மணமுடையவனாகவும் இளமை பொருந்தியவனாகவும் தெய்வத்தன்மை வாய்ந்தவனாகவும் விளங்கக்கூடியவன். இவனது முகத்தழகுக்குத் தன் முகத்தழகு ஒப்பில்லையே என்னும் கருத்தோடு திருமகள் இவனது முகத்தையே பார்த்துக்கொண்டிருப்பாள். தன்னைக் கமலக் கண்ணன் என்று சொல்வது உபசாரமே அன்றி உண்மையாகாது. கண்ணழகுடையவன் இக்கந்தனே என்று வியந்த வண்ணம் திருமால் அம்முருகப் பெருமானது கண்களையே பார்த்துக் கொண்டிருப்பார். அவனது திருவடி அழகை அன்பர் நோக்கி மகிழ்வர். உமையம்மையாரோ தம் திருக்குமாரனை நன்கு அலங்கரித்து முன்னே செல்லவிட்டு அவனது பின்னழகைப் பார்த்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டிருப்பர். எல்லாம் வல்ல இறைவனும் சிவபெருமான் தன் மகனது சொல்பொருளின் அழகைக் கேட்டு இன்புறுவர்.

முருகப் பெருமானது இளமைப் பருவத்தில் பெற்ற பெருமைக்கும் அளவில்லை. இவனுக்கு அமைந்த தொட்டில் சாதாரணப் பொன் வெள்ளியாகிய அழியும் பொருளால் அமைந்ததன்று. ஐந்தெழுத்தாகிய சிவாயநம என்னும் பஞ்சாட்சர மகா மந்திரத்தால் ஆனது. அதற்கு அமைக்கப்பட்ட சங்கிலிகள் நான்கு வேதங்களாகும். இக்குழந்தையின் தொட்டிலை அசைத்துத் தாலாட்டியவர் இச்சை, ஞானம், கிரியை, ஆதிசத்தி என்னும் நான்கு தாதியார் ஆகும். இவ்வாறு சொல்லி முடியாத பெருமையுடையன்

முருகப் பெருமான். அப்படிப்பட்டவனுக்குரிய நாளான சஷ்டியில் நாம் இங்குக் கூடி அவனது வரலாற்றைக் கூறப்போகிறோம் என்று கூறி முடித்தார். இந்த முகவுரையே நீளமாக இருந்ததால் அன்றைய பிரசங்கம் அதனோடு முடிவு பெறும் நிலையில் இருந்தது. சனங்கள் எழுந்து போக எத்தனித்துக்கொண்டிருந்தனர். காளமேகப் புலவருக்கு இங்கு ஒரு தமாஷ் செய்யவேண்டும் என்பது பொருள். ஏனென்றால் அங்கு வந்திருந்தவர்கள் எல்லாம் பக்திச் சுவையோடு முருகன் பெருமையைக் கேட்டுக்கொண்டிருந்தனரே அன்றி நகைச்சுவையாதும் தோன்றாமல் இருந்தனர். அச்சுவையைத் தோற்றுவிக்க வேண்டும் என்று எண்ணியவராய்த் தாமும் சிறிது பேச எண்ணங் கொண்டார். காளமேகம் உடனே எழுந்து 'சபையோர்களே! இதுவரை நமது முருகப்பெருமானது அருமை பெருமைகளைக் கேட்டுக்கொண்டு வந்தீர்கள். நானும் கேட்டு ஆனந்தம் கொண்டேன். எனக்குத் தெரிந்த அளவு அந்த முருகனது பெருமை கூறுகிறேன். அதையும் கொஞ்சம் கேளுங்கள்' என்று கேட்டுக்கொண்டார். எல்லோரும் சொல்லுங்கள் என்று கூறக் காளமேகத்திற்கு அதிக உற்சாகம் பிறந்துவிட்டது. பின்வருமாறு பேசி ஒரு பாடலையும் பாடினர்.

முருகப்பெருமான் தகப்பனர் யார் தெரியுமோ? அவர் ஒரு பிச்சைக்காரர். பிச்சை எடுத்துத் தான் சாப்பிடவேண்டும். (சிவன் கோவில் உற்சவங்களில் சுவாமி பிட்சாடர் வேடந் தரித்து வருவதால்

இவ்வாறு வேடிக்கையாகக் கூறினர்) இவருடைய தாயாரைப் பற்றிக் கூறவேண்டுமானல் அவள் மலை நாட்டு நீலி. அதாவது கருங் குறத்தி (உமையம்மை யார் பர்வத ராஜன் மகளாகப் பிறந்து நீலநிறத்தோடு விளங்கியதைச் சமத்காரமாகக் கூறினர்) முருகனுக்கு மாமன் யார் தெரியுமோ? அவர்தான் திருமாலாகிய கிருஷ்ணன். கிருஷ்ணனே கோபியர் வீடுகளில் நுழைந்து வெண்ணெய் திருடி மத்தடி பட்ட கள்வன் உடன் பிறப்பைக் கேட்கிறீர்களா? சொன்னல் வெடகக்கேடு. இவர் உடன் பிறப்புத் தான் கணபதி அக்கணபதியின் கால்கள் எல்லோ ருக்கும் இருப்பதுபோல் இருக்கமாட்டா. சப்பையாக இருக்கும். வயிறும் சாதாரணமாக இருக்காது. பெரு வயிருக இருக்கும். இந்தப் பெருமைதான் முருகனுக் குரிய பெருமை என்று,

அப்பன் இரந்துண்ணி ஆத்தாள் மலைநீலி
ஒப்பரிய மாமன் உறிதிருடி—சப்பைக்கால்
அண்ணன் பெருவயிறன் ஆறு முகத்தானுக்கிங்
கெண்ணும் பருமை இவை.

பாடி முடித்தார்.

சபையோர்கள் எல்லாம் கொல் என்று சிரித் தார்கள். காளமேகப் புலவரது கற்பனையை வியந் தார்கள். அங்கு அவருக்கு நடந்த சிறப்பு அளவிட முடியாது. சஷ்டி விழா முடியும் வரையில் அங்கேயே இருக்குமாறு வேண்டிக்கொண்டனர். அவரும் அவ் வாறே இருந்து பிறகு விடை கொண்டார்.

# உன்னிலுமே நான் அதிகன்

—:o:—

கார்த்திகை மாதம் கனத்த மழை என்பர். அம் மழைக் காலத்தில் ஒரு நாள் காளமேகப் புலவர் திருக்கண்ணபுரம் என்னும் திருக்கோயில் உள்ள தெருவழியே போய்க்கொண்டிருந்தார். மழை பிடித்துக்கொண்டது. பெரு மழை, அதுவும் விடா மழை. ஒதுங்க இடம் இல்லாமையால் எவர்க்கும் பொது இடமாகிய திருக்கண்ணபுரக் கோயிலில் நுழைந்தார்.

திருக்கண்ணபுரக் கோயில் திருமால் கோயில். அதாவது வைஷ்ணவக்கோயில். அதில் பூசை புரிகிறவர்கள் யாவரும் பரம வைஷ்ணவ பட்டாச்சாரியர்கள். அவர்கள் காளமேகப் புலவரை நன்கு அறிந்தவர்கள் காளமேகப் புலவர் ஸ்ரீரங்கர் கோவிலில் பரிச்சாரகராக அதாவது பெருமாளுக்குச் சித்திரான்னம் முதலியவற்றைச் செய்யும் மடைப்பள்ளி அய்யங்காராய் இருந்தவர் என்பதும், அவர் தாம்மணந்திருந்த சைவகுல மாதின் விருப்பப்படி வைணவ மரபை விடுத்துத் திருவானைக்காவல் சிவன் கோவில் பரிச்சாரகராக அமர்ந்து, அவ்வூர் அகிலாண்ட நாயகியார் திருவருளால் புலவர் ஆனதும், அதன் பிறகு அவர் சைவப் புலவர் ஆனதும் அவர்கட்கு நன்கு தெரியும்.

காளமேகப் புலவர் புலவர் ஆனது பற்றியோ, சைவப் பெண்ணோடு வாழ்ந்து வந்ததுபற்றியோ திருக்கண்ணபுரப் பட்டாச்சாரியார்கட்குக் கவலையோ பொருமையோ கிடையாது. தம் வைஷ்ணவ சமயத்தை விடுத்துச் சைவ சமய ஒழுக்கத்தை மேற்கொண்டாரே என்பது பற்றித்தான் அப்பட்டாச்சாரியார்கட்கெல்லாம் வயிற்றெரிச்சல். இந்தக் காரணத்தால் காளமேகம் கோவிலுக்குள் நுழைவதை அவர்கள் விரும்பாமல் புலவர் உள் நுழைவைத் தடுத்தனர். புலவரோ நன்கு நனைந்திருந்தார். ஆடையும் ஆக்கையும் நீரில் மூழ்கியவர்போல் தோற்றம் அளித்தன. முற்றிலும் தாம் நனைந்திருப்பதால் அம் மழையிலேயே போய்க்கொண்டிருக்கலாகாதோ எனில் காற்றும் மழையும்கலந்தடித்ததனுல் மழையின் வீச்சு இவரைத் திணரச் செய்தது ஆகவே புலவர் ஒரு புகலிடம் தேடவேண்டியது இன்றியமையாததாகிவிட்டது.

பட்டாச்சாரிகள் உள் வர ஒட்டாமல் தடுக்கின்றனர். மழையோ வெளியே தலை காட்டாதபடி தடை செய்து நிற்கிறது. பாவம் புலவர் என் செய்வார்! குளிர் ஒருபக்கம், சாரல் ஒரு பக்கம், கோயிலின் உள் நுழைய இல்லாத் தடை மற்றொரு பக்கம். இந்த இரக்கமான நிலையைக் கண்ட அங்கிருந்த பட்டாச்சாரியர்களில் ஒருவர், காளமேகத்தைப் பார்த்து ஐயா! நீர் நம் திருமாலாகிய தெய்வமே எல்லாத் தெய்வங்களைக் காட்டிலும் உயர்வானவர் என்னும் கருத்துப்பட ஒரு பாட்டுப் பாடுவதானல் உம்மை

உள்ளே அழைத்துக் கொள்ளுகிறோம் என்றனர். காளமேகம் சந்து விட்டால் வந்துவிட்டேன் என்னும் நிலையில் இருந்தமையால் இதுதானா பிரமாதம் அப் படியே பாடுகிறேன் என்று பதில் கூறினர். உடனே காளமேகப் புலவர் கோயிலுக்குள் அழைக்கப் பட்டார்.

காளமேகம் முதலில் தம் ஆடைகளை அவிழ்த்து அதில் உள்ள நீரை எல்லாம் பிழிந்தெடுத்தார். பிறகு உடலை நீர் போகத் துடைத்துக்கொண்டார். இதற் குள்ளே அப்பட்டாச்சாரியர்கள் உறையுள் கொடுத்த தோடு நில்லாமல் உணவும் கொடுக்கவேண்டும் என்று எண்ணியவராய், அன்று பெருமாளுக்கு அம்ஸை (படையல்) பண்ணிய புளியொதரை தோசை, தேங் குழல், வடை முதலியவற்றைக் கொண்டுவந்து கொடுத்தனர். பெருமாள் கோவிலுக்கு உணவுக்கு என்ன குறை? வேளா வேளைக்கு நல்ல உணவு படை யல்தான். பட்டாச்சாரியர்கள் காளமேகத்திற்குக் கொடுத்ததன் நோக்கம் ஒரு சைவப் புலவரால் திருமாலே பெரிய தெய்வம் என்னும் பாடலைப்பெறப் போகின்றோம் என்னும் மகிழ்ச்சியின் மேலீடே யாகும்.

காளமேகப் புலவருக்கும் பெரும் பசி. அய்யங் கார் சுவாமிகள் கொடுத்த அவ்வளவு பிரசாதங்களை யும் உண்டார். இதற்குள்ளே மழையும் நின்று விட்டது. காளமேகத்தின் களைப்பும் நீங்கியது.

புலவர் எழுந்தார் திருமால் முன் நின்ருர். பட்டாச்சாரியர்களும் எழுந்து புலவரைச் சுற்றி நின்றனர்.

காளமேகம் திருமாலைப் பார்த்துத் திருக்கண்ணபுரத்துத் திருக்கோயிலில் எழுந்தருளி இருக்கும் பெருமாளே! தெய்வங்கட்கெல்லாம் நீதான் சிறந்த தெய்வம். ஆனல் உன்னைவிட நான் சிறந்தவன். இப்படிச் சொல்வதற்குக் காரணம் இருக்கிறது. நான் காரணம் இல்லாமல் எதையும் சொல்லமாட்டேன். உனக்கு ஏற்பட்டுள்ள பிறப்புப் பத்துதான். அவற்றைத் தான் உலகோர் தசாவதாரம் என்கின்றனர். எனக்குள்ள பிறப்புக்குக் கணக்கில்லை. எண்ணிலாத நெடுங்காலம் எண்ணிலாத பல பிறவி எடுத்தே இளைத்து இம்மானிடத்தில் வந்துதித்து என்றும், எண்ணரிய பிறவி தனில் மானிடப் பிறவியாதினும் அரிது அரிது, என்றும் பெரியோர் கூறியுள்ளார். சிவபெருமானைப்பற்றி ஒன்றும் கூறவேண்டியதில்லை. அவர் உயர் சிவன் உயர் சிவனே. அவர் பிறப்பும் இல்லாதவர் என்றும் பொருள் எல்லாம் தொனிக்கும் முறையில்,

கன்னபுரமாலே கடவுளரில் நீயதிகம்
உன்னிலுமே யான்அதிகன் ஒன்றுகேள்—முன்னமே
உன்பிறப்போ பத்தாம் உயர்சிவனுக் கொன்றுமிலை
என்பிறப்பெண் ணத்தொலையா தே,

என்று பாடி முடித்தார்.

இதைக் கேட்ட விஷ்ணு கோயில் பூசகர்கள் இவனை உள்ளே சேர்த்தது பெருந்தவறு என்றும், கிணறு வெட்டப்பூகம் புறப்பட்டாற்போல் ஆயிற்றே என்றும் கூறிக்கொண்டு புலவரை விரட்டினர். அவரும் அவ்விரட்டலுக்குச் சிறிதும் சட்டை செய்யாதவராய்த் தம் வழியே புறப்பட்டார்.

---

# எந்த வினைதீர்ப்பார் இவர்?

—:::—

'சோழ நாடு சோறுடைத்து' என்னும் சிறப்போடு, கோயில் பல நிறைந்த வளமும் உடைத்து என்னும் பெருமையும் பெற்றது. சேரநாடு பாண்டிய நாடு ஆகிய இவ்விரு நாடுகளில் உள்ள கோயில்களிலும் சோழ நாட்டில் உள்ள கோயில்களே பலவாகும்.

இப்படிப் பலவாய கோயில்களில் வைதீஸ்வரன் கோயில் என்பது ஒன்று. இது மாயவரத்திற்கு அருகில் உள்ள பெரிய கோயில் தருமபுர மடத்தைச் சார்ந்த கோயில்களில் ஒன்று. சீர்காழியை விட்டு மாயூரம் செல்லும் இருப்புப் பாதையில் போகும் போதே அதன் வானளாவிய கோபுரங்கள் மக்கள் உள்ளத்தைக் கவர்ந்து வருக வருக என்றழைப்பன போல் நிமிர்ந்து நிற்கும் தோற்ற முடையன. இக் கோயிலுக்குள் முத்துக்குமரன் ஆலயமும் சிறக்க விளங்க வல்லது. இக் குமரன் மீது பாடப்பட்ட நூலே குமர குருபரர் பாடிய முத்துக் குமாரசாமி பிள்ளைத் தமிழ் ஆகும். வைதீஸ்வரன் கோயிலும் சைவ சமயாசிரியர்களால் பாடல் பெற்ற பெருமையுடையது. அத் தேவாரப்பாடல்களில் இக் கோயில் புள்ளிருக்கும் வேளூர் என்னும் பெயரால் குறிக்கப்

பட்டிருக்கும். 'புள்ளிருக்கும் வேளூரானைப்போற்றாதே ஆற்ற நாள் போக்கினேனே' என்னும் அப்பர் சுவாமிகளது அருள் வாக்கையும் நோக்குக. இந்த வைதீஸ்வரன் கோவிலுக்கு மேற்கே ஏறக்குறைய இரண்டுகல் தொலைவில்தான் நந்தனுருக்கு நந்தி விலகி தரிசனம் கொடுத்த தலமாகிய திருப்புன்கூர் என்னும் திவ்விய க்ஷேத்திரமும் விளங்கிக் கொண்டிருக்கிறது. இப்பொழுது சென்றாலும் உருவத்தால் மிகப் பெரிய நந்தியையும், அந்நந்தி ஏனைய சிவன் கோயில்களில் சுவாமிக்கு நேரே படுத்திருப்பது போல் இல்லாமல் சிறிது ஒதுங்கிப்படுத்திருப்பதையும் கண்டு களிக்கலாம்.

இப்படிப்பட்ட சுற்றப்புறக் காட்சிகளுடன் விளங்கும் வைதீஸ்வரன் கோவிலுக்குக் காளமேகப் புலவர் வந்தார். அவர் கோயிலுக்குள் நுழைந்ததும் யாரோ புதியவர் வந்திருக்கிறார், அவருக்கு இக் கோயிலைச்சுற்றிக் காட்டுவோம் என்று நினைத்த ஓர் ஆள் புலவர் அருகு வந்தான்.

இப்படிப்பட்ட ஆட்கள் பெரிய பெரிய கோயில்களில் இப்பொழுது இருக்கின்றனர். அவர்கள் பெரும்பாலும் உள்ளூர் வாசிகளே. அவர்கட்குக் கோயிலைப் பற்றிய விவரங்கள் பெரிதும் தெரியா விட்டாலும் சிறிதளவு யாத்திரையாக வருகின்றவர்கள் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்களைச் சொல்லும் திறமை படைத்தவர்கள். யாத்திரையாக வருபவர்கட்கு அவர்கள் உதவியும் தேவையாக

இருப்பதால் அவர்கள் சொல்லுவன சொல்லிக் காட்டுவன காட்டி முடிந்த பிறகு காசு கொடுப்பர் அதனை வாங்கி அவர்கள் வயிறு வளர்ப்பது உண்டு.

இப்படிப்பட்ட ஆட்களில் ஒருவனே புலவரை அணுகியவன். புலவரை அழைத்துக் கொண்டு போனான். அழைத்துச் சென்றவன், 'இதுமண்டபம் இதில் பல்லாயிரம் பேர்களும் ஒரு சேரத் தங்கி இருக்கலாம். சுவாமிக்குரிய நெல் மணிகளைக்கூட இங்குதான் உலர்த்துவார்கள். இது கோயில் தீர்த்தக்குளம். இது முத்துக்குமாரசாமி சந்நிதி. இது அம்மன் கோயில், இது கணபதி ஆலயம், இவர். சண்டேஸ்வரர் என்றெல்லாம் காட்டியும் சொல்லியும் வந்து கொண்டிருந்தான். புலவர் அப்படியா அப்படி யா என்று சொல்லிக் கொண்டும் இரு கைகளைச் சேர்த்து வணங்கிக் கொண்டும் தலையசைத்துக் கொண்டும் வந்தார். ஆள் கூறிய அனைத்தும் புலவர் அறியாதவர் அல்லர். அப்படி இருந்தும் அவன் மனம் நோகாதிருக்க அறியாதவர் போல் நடித்து வந்தார்.

புலவருடன் வந்த ஆள் சுவாமியின் மூலட்டனத் தின் முன் நிறுத்தி இவர் தாம் வைதீஸ்வரர். இவரை வைத்தியநாதர் என்று கூடச் சொல்லித் துதிப்பர். என்று கூறினன். மூலஸ்தானமாகையால் பல மக்கள் உள்ளூர் வாசிகளும் வெளியூர் வாசிகளுமாகப் பலர் கூடியிருந்தனர். வைதீஸ்வரர் இவர்தான் என்று குறிப்பிட்டதைக் கேட்ட புலவர் களுக் என்று

நகைத்தார். பக்கத்தில் இருந்தவர்கள் எல்லாம், இவர் என்ன பைத்தியம் பிடித்தவரா? சுவாமியின் பெயரைச் சொன்னால் பய பக்தியோடு வணங்குவதை விடுத்துச் சிரிக்கின்றனரே என்று புலவரைப் பார்த்து ஐயா நீர் ஏன் இப்படிச் சிரித்தீர் என்று கேட்டனர்.

புலவர் அங்கு தரிசனம் செய்து கொண்டிருந்தவர்களையும் மற்றுமுள்ளவர்களையும் பார்த்து, ஒன்றுமில்லை, சுவாமியின் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் எனக்குச் சிரிப்பு வந்து விட்டது ஏனென்றால் இவருக்கோ இவர் பிள்ளைக்கோ இவர் மைத்துனருக்கோ வந்த நோயைத் தீர்க்க வழியில்லாதிருந்தும் பெயர் மட்டும் வைதீஸ்வரர் என்று நீளமாக வைத்துக் கொண்டிருக்கிறாரே குடிக்கக்கூடத் தண்ணீர் இல்லாத ஒரு பெண்ணுக்குக் கங்கா பவானி என்று பெயர் வைத்திருப்பது போல அல்லவா இருக்கிறது? இதனால்தான் சிரித்தேன் என்றனர்.

தரிசனமாக வந்தவர்கள் புலவரைக் கவனித்து இவர் ஏதோ விஷயந் தெரிந்தவராகக் காணப்படுகிறார் என்று அவர் முகப் பொலிவால் உணர்ந்து கொண்டனர். அகத்தழகு முகத்தில் தெரியும், அல்லவா? ஐயா பெரியவரே! வைதீஸ்வரர் தமக்கும் தம்மைச் சார்ந்தவர்களுக்கும் வந்த நோயைத் தீர்க்க வழி இல்லாதவர் என்று சொன்னீர்களே அது எப்படி என்று கேட்டனர். புலவரும், 'ஆ அப்படிக் கேளுங்கள் கூறுகிறேன்' என்று சொல்லி சகோதரர்

களே இந்த வைதீஸ்வரருக்கே நடராஜர் என்னும் பெயர் உண்டு அந்த நடராஜர் உருவத்தை நீங்கள் பார்த்திருக்கிறீர்கள் அல்லவா அவர் கைகளும் கால் களும் எப்படி இருக்கின்றன? கோணலாக அல்லவா இருக்கின்றன? அவை ஏன் அப்படி இருக்கின்றன என்பது உங்களுக்குத் தெரியுமா? நடராஜருக்குப் பாரிச வாய்வு வந்ததனுல் கை கால்கள் முறுக்குண்டிருக்கின்றன. சரி போகட்டும். தம் நோயைப்பற்றி அவ்வளவு கவலை எடுத்துக் கொள்வதில்லை என்று நீங்கள் சொன்னுலும் சொல்வீர்கள். அவருடைய மைத்துனரைப் பாருங்கள். மைத்துனர் என்ருல் சாதாரண மைத்துனர் இல்லை. தம் தங்கையாகிய பார்வதி தேவியாரையே இவ் வைத்தியநாதருக்குத் திருமணம் செய்து கொடுத்தவர். ஆகவே அவர் நெருங்கிய பந்து அல்லவா? உலகத்தில் கூட 'மைச்சானுக்கு மிஞ்சின உறவில்லை மயிருக்கு மிஞ்சின கருப்பு இல்லை' என்று கூடச் சொல்லுவார்களே? அப்படிப்பட்ட அருமை மைத்துனர் நீர் இழிவு வியாதியால் பெருங் கஷ்டப்படுவதைத் தீர்த்துக் கொள்வதற்காக அல்லவா சதா குளிர்ச்சியோடிருக்கத் திருப்பாற் கடலில் படுத்துக் கொண்டிருக்கிருர். அந்த நோயை இவர் போக்கினரா? அதுவும் போகட்டும். தம் குடிக்கே மூத்த பிள்ளை, அதுவும் சீமந்த புத்திரன். மேலும் முதற் பிள்ளையின் மீதுதான் பொதுவாகத் தந்தை மார்க்கு ஆசை என்று' கூட உலகத்தோர் சொல்லுவர். அப்படிப் பட்ட பிள்ளையாகிய கணபதிக்கு மகோதரத்தால் பெருவயிறு உண்டாயிருக்கிறது. இவற்றையெல்லாம்

தீர்க்க மருந்தறியாத இவர் எப்படி ஐயா வைத்திய நாதன் என்றும் வைத்தீஸ்வரர் என்றும் பெயர் வைத்திருக்கிறார்? இவர் எந்த வினைதீர்ப்பார் என் பதை விளக்கிக் கீழ்வரும் பாடலைப் பாடினார்,

வாதக்கா லாந்தமக்கு மைத்துனர்க்கு நீரிழிவாம்
போதப் பெருவயிறும் புத்திரனுக்—கோதக்கேள்
வந்தவினை தீர்க்க வகையறியார் வேளூரார்
**எந்தவினை தீர்ப்பார் இவர்**

இதைக் கேட்டதும் எல்லோருக்கும் சிரிப்பு வந்து விட்டது. சுவாமியின் பெயரைகொண்டு கற்பனையாகப் பாடிக் காட்டினார் என்று அவரைக் கொண்டாடினர். அப்போதுதான் வழி காட்டியான ஆளுக்குத் தன் னோடு வந்தவர் சாதாரணமானவர் அல்லர் என்பது தெரிய வந்தது.

———

# மாமன் காணிக்கு வந்திருந்தான் காண்

—:o:—

காளமேகப் புலவர் கவி பாடும் புலமை பெறு வதற்கு முன் ஸ்ரீரங்கம் கோயிலில் பரிச்சாரகராக இருந்தவர். அதாவது பெருமாளுக்குத் தளிகை (சித்திரான்னங்களாகிய புளியோரை, எள்ளோரை, ததியோதனம், சக்கரைப் பொங்கல்) செய்யும் மடைப் பள்ளி வேலை. ஆகவே இவர் ஸ்ரீரங்கக் கோயில் அய்யங்கார் ஆவார். இவருக்கு வாய்த்த இல்லறக் கிழத்தி ஒரு சைவமாது. அதைப்பற்றிக் காளமேகப் புலவருக்கோ, அச்சைவமாதாகிய மோகனங்கிக்கோ கவலை கிடையாது. ஆனல் மோகனங்கியின் சினேகி கள்தான் அவளைக் கிண்டல் செய்ய ஆரம்பித்தனர். நீ சைவப் பெண்ணுக இருந்தும் ஒரு வைணவனைக் கலியாணம் செய்து கொண்டனையே இது முறையா என்று அடிக்கடி ஏளனம் செய்ய ஆரம்பித்தனர். அவளும் அதைப் பொருட்படுத்தாமல் இருந்து வந்தாள். அடிமேல் அடி யடித்தால் அம்மியும் நகரும் அல்லவா? அவளும் அவர்கள் சொல்வதைச் சிந் தித்துத் தன் காதலனிடம் நீங்கள் வைணவராக இருப்பது எனக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. ஆகவே நீங்கள் சைவ சமயத்திற்கு வந்து விட வேண்டும் என்று கூறினள். காளமேகப் புலவர் தம் காதலியிடத்து வைத்த அன்பின் மிகுதியால் அவள்

பேச்சிற்குக் குறுக்கு ஒன்றும் சொல்லாமல், அப்படியே திருவரங்கப் பரிச்சாரகர் தொழிலை விடுத்து, விபூதியைப் பட்டை பட்டையாகச் சாத்திக்கொண்டு திருவானைக்கா கோவில் பரிச்சாரகராக வந்து வேலையில் அமர்ந்து விட்டார். ஆகவே காளமேகம் சைவ ராகி விட்டார்.

காளமேகம் சைவரான பிறகுதான் அவருக்குப் புலமை ஏற்பட்டது. திருவானைக்காவின் தேவியாகிய அகிலாண்ட நாயகியின் திருவருளால்தான் கவிபாடும் புலமையும் பெற்றார். அதன் பின்பே கவிகாளமேகம் என்னும் சிறப்புப் பெயரையும் பெற்றார். அதற்கு முன் அவருடைய பெயர் வீர ராகவன் என்பது.

இப்படிப் புலமையும் காதலும் மிகுந்து காள மேகப் புலவர் சுகமாக வாழ்ந்து வந்த நாட்களில் ஒரு நாள் தமக்கு ஓய்வு கிடைத்த போது, தாம் முன்பிருந்த திருவரங்கப் பெருங் கோயிலுக்குச் சென்றார். இவர் வருவதைப் பார்த்த அய்யங்கார்களுக்கு இவர் மீது கடுங் கோபந்தான். அக் கோபத்திற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று வைணவராய் இருந்தவர் சைவராய் மாறிவிட்டனரே என்பது, மற்றொன்று சுவையாகச் சித்திரான்னங்களைச் செய்து தருபவர் இவ்விடம் விட்டுப் போய் விட்டனரே என்பது. ஆகவே அவரைப் பார்த்து என்ன இருந்தாலும் பெருமாள் கோயில் பெருமாள் கோயில்தான் என்பதை ஆதரவாகக் கொண்டு காளமேகப் புலவரைத் தாழ்வு படுத்த ஒரு யுக்தி செய்தனர்.

காளமேகம் அருகு வந்து கொண்டிருந்தனர். ஸ்ரீரங்க அய்யங்கார்கள் 'வா! ஐயா! வா! என்ன மிகவும் இளைத்துப் போயிருக்கிறீர்' என்று கேட்டு வாய் மூடுவதற்குள் மற்றோர் ஐயங்கார் 'ஆமாம் ஆமாம் பாவம் இங்கே கிடைத்தாற்போல் பொங்கல், வடை, தோசை எல்லாம் அச்சிவன் கோயிலில் எங்கே கிடைக்கும். அதனால்தான் போதுமான உணவு இன்றி இளைத்துப் போய் இருக்கின்றனர்' என்றனர். இதற்குள்ளே மற்றோர் அய்யங்கார் 'இதோ பாரும் ஐயா உங்கள் சுவாமியின் பெரிய பிள்ளையாகிய கணபதி கூட எங்கள் பெருமாளிடத்தில் வந்து தங்கி இருக்கிறார். அவர் ஏன் இங்கு வந்து தங்கி இருக்கிறார் தெரியுமா? பிள்ளையார் வயிறுதாரி அவருக்கு நிரம்ப உணவு வேண்டும். அவர் பசியை ஆற்றிக் கொள்ளத் தகுந்த உணவு அவர் தந்தை யாரிடம் கிடைக்காது, ஆகையால் தம் மாமாவிடம் சென்றால் (கணபதியின் தாயார் பார்வதி திருமாலின் தங்கையாதலால் திருமால் கணபதிக்கு மாமா வானார் வயிறாரச் சாப்பிடலாம் என்று நாங்கள் படைக்கும் தோசை, வடை, பொங்கல், தேங்குழல் முதலான வற்றை நினைத்துக் கொண்டே இங்கு வந்து தங்கி விட்டார். அப்படி இருக்க நீர் இங்கிருந்து போய் விட்டீரே' என்று நாலா பக்கமும் அய்யங்கார்கள் சூழ்ந்து கொண்டு காளமேகத்தையும், கணபதியையும் ஏளனம் செய்து கும்மாளம் அடித்தனர்.

அது வரையிலும் வாயைத்திறக்காமல் புன்சிரிப் புடன் இருந்த காளமேகம் இன்னமும் ஏதாகிலும்

இருந்தால் சொல்லிவிடும் அதற்கு மேல் நான் சில கூறுகிறேன் என்றனர்.

நீ சொல்வதற்கு என்ன இருக்கிறது? சொல்வதை இப்பொழுதுதான் சொல்லுமே என்று அசட்டையாகக் கூறினர். உடனே காளமேகம் தன் வாயைத்திறந்து, நான் வைணவனுக இருந்து சைவனுகப் போனதைப் பற்றியும் என் உடல் தளர்ந்திருப்பதைப் பற்றியும் நீங்கள் கவலைப்படவேண்டா. பாவையர் கை தீண்டப் பணியாதார் யார்? ஆனல் எங்கள் பிள்ளையாரும் இங்கு உணவின் பொருட்டு வந்திருக்கிறுர் என்று குறிப்பிட்டீர்களே! அதைப் பற்றிக் கொஞ்சம் சொல்லுகிறேன் கேளுங்கள். எங்கள் கணபதி உங்கள் அன்னத்திற்கு ஆசைப்பட்டு இங்கு வரவில்லை. அவருக்கு வேண்டிய சுண்டல், கொழுக்கட்டை, அப்பம் கொடுக்க அன்பர் பலர் காத்துக்கொண்டிருக்கின்றனர். ஒரு முக்கியமான காரணத்திற்குத்தான் இங்கு வந்திருக்கின்றனர் என்றனர். இதற்குள் அக் கூட்டத்தில் ஒருவர் அது என்ன ஐயா முக்கிய காரணம் என்றனர்.

விநயகருக்குச் சொத்துமேலே ஆசை அதிகம். அந்தச் சொத்துத் தகப்பன் இறந்த பிறகுதான் பிள்ளைக்குச் சேரும். கணபதியின் தகப்பனர் சிவபெருமான். அந்தச் சிவனே இறப்பதாகக் காணேம். அவன் இறப்பதும் இல்லை, பிறப்பதும் இல்லை என்னும் பெயரை எடுத்து விட்டான். ஆகவே தன் தாய் மாமனிடத்திற்காகிலும் போய்விடலாம் அவ

னுக்கு அஷ்ட ஐஸ்வரியங்களும் இருக்கின்றன. அவனுக்குப் பிள்ளையும் இல்லை. மன்மதன் என்னும் ஒரு பையன் இருந்தான். அவனையும் தன் தகப்பனர் சுட்டு எரித்து விட்டார். தன் மாமன் பிறந்து இறக்கும் இயல்பு பெற்றவன் ஆகையால் மாமனுடைய சொத்துக்கள் முழுமையும் தானே அனுபவிக்க இங்கு வந்து தங்கியிருக்கிருனே தவிர உங்கள் தோசைக்கும் வடைக்கும், பொங்கலுக்கும் வரவில்லை, என்னும் பொருளில் சிவன் பிறப் பிறப்பில்லா முழுமுதற் கடவுள் என்பதையும், திருமால் மக்களைப் போல் பிறந்திறக்கும் இயல்பு பெற்றவன் என்பதையும் குறிப்பாக விளக்கக் கீழ் உள்ள பாட்டைப் பாடினர்.

தந்தை பிறந்திறவாத் தன்மையினல் தன் மாமன்
வந்து பிறந்திறக்கும் வன்மையினல்—முந்தொரு நாள்
வீணிக்கு வேளை எரித்தான் மகன் மாமன்
காணிக்கு வந்திருந்தான் காண்

இதைக் கேட்டதும் அங்கிருந்த அர்ச்சகர்களுக்கு அவமானமாகி விட்டது. வாயை மூடிக்கொண்டனர். அதன் பிறகு பேச்சு மூச்சு வாவில்லை.

———

# இடுக்கடி பாயைச் சுருட்டடி

—:o:—

காளமேகம் தன்கவிதா மழையைப் பெய்து கொண்டு எங்கும் தமக்கு ஒப்பாரும் மிக்காரும் இன்றித் திக் விஜயம் செய்து கொண்டிருந்தார். எங்குச் சென்றாலும் தம் குடி இருப்பு மட்டும் திருவானைக்காவில் இருந்தது. திருவானைக்காவுக்கும் திருவரங்கத்திற்கும் ஏறக்குறைய ஒரு மைல் தொலைவு தான் இருக்கும். ஆகவே காளமேகப் புலவர் அடிக்கடி திருவரங்கம் சென்று மீள்வர். அப்படி மாலையானதும் உலாவ வேண்டுமானாலும் திருவரங்கப் பெருங்கோயில் மண்டபத்திற்குப் போய்விடுவார். அவ்விடம் அவர் இருந்து பழகிய இடமாதலின் அங்குப் போக அவருக்கும் ஆசைதான்; ஆனால் அவர் அங்குபோகும் சமயங்களில் எல்லாம் ஏதாகிலும் ஒரு நிகழ்ச்சி சுவை தரத்தக்க நிலையில் நிகழும். அப்படி நிகழ்ந்த நிகழ்ச்சிகளில் ஒன்று இவருக்கும் ஒரு வைணவப் பாகவதருக்கும் நடந்த பேச்சாகும்.

ஒரு நாள் காளமேகப் புலவர் திருவரங்கம் சென்றிருந்தார். அங்கு ஒரு வைணவப் பாகவதர் வெகு தடபுடலாக அரங்கநாதனது வரலாற்றைப் பற்றிக் காலட்சேபம் செய்து கொண்டிருந்தார். அதனைக் கேட்கக் காளமேகமும் உட்கார்ந்து கொண்டார்.

காலட்சேபம் இனிதாய் முடிந்தது. கூட்டமும் சிறிது சிறிதாகக் கலைந்தது. கடைசியில் அங்கிருந்த வைணவர்கள் காளமேகப் புலவரைப் பாகவதருக்கு அறிமுகப்படுத்திவைத்தனர். அப்படி அறிமுகப் படுத்துகையில் இவர் இங்கு இருந்த பரிச்சாரகர்தான். பிறகு திருவானைக்காவின் தேவியான அகிலாண்ட நாயகியின் திருவருளால் கவிபாடும் வன்மை வரப் பெற்று எவர் எம்முறையில் பாடுமாறு விரும்புகின்றனரோ அப்படி எல்லாம் பாடவல்ல பெருமையும் அறிவும் வாய்க்கப் பெற்றவர், என்று உண்மையாகவே புகழ்ந்து பேசினர். பாகவதருக்குக் காளமேகப் புலவரது புலமையைச் சோதிக்க வேண்டும் என்னும் எண்ணம் தோன்றியது.

புலவர்கள் மற்றொரு புலவரது அறிவைச் சோதிக்கப் புறப்பட்டால் கொஞ்சம் சிக்கலான கேள்விகளைக் கேட்டே சோதிக்க முற்படுவர். இவ்வாறு கேட்க முற்படுவது அவர்களது அறிவின் ஆழத்தை அறிந்து கொள்வதற்காக அன்று அவர்கள் அத்தகைய கேள்விகட்கு விடை தெரியாமல் விழிக்கட்டுமே என்னும் எண்ணமே ஆகும். அரைகுறையான படிப்புடையவர் அல்லவோ கேட்ட கேள்விக்கு விடை தெரியாமல் விழிக்க நேரிடும். அன்றி ஆண்டவனுடைய அருளைப் பெருதவர் அன்றோ திணர நேரிடும். காளமேகம் அறிவும் ஆண்டவன் அருளும் பெற்றவர் ஆதலின் அவரைக் கேட்டால் எக்கேள்விக்கும் விடை கூறும் வித்தகராய் விளங்கினர்.

எனவே பாகவதர் 'இடுக்கடி பாயைச் சுருட்டடி ஏறடி அம்பலத்தே' என்னும் அடி ஈறுகக் கொண்ட ஒரு பாடலைப்பாடும் என்று கட்டளை இட்டனர். இவ்வாறு கேட்பது தம் அறிவைப் பாராட்டாற் கன்றி நம்மை இதன்மூலம் கொஞ்சம் அவமானப் படுத்த வேண்டும் என்னும் எண்ணமே அன்றி வேறன்று என்பதைக் குறிப்பால் உணர்ந்த புலவர் பெருமான், பாகவதருக்கே வெட்கந்தோன்றுமாறு ஒரு கட்டளைக் கலித்துறை என்னும் பாவைப் பாடத் தொடங்கினர்.

நீங்கள் நடராஜாவின் உருவத்தைப் பார்க்கையில் அவ்வுருவோடு இருமுனிவர்கள் இரு பக்கங்களிலும் இருப்பதையும் உடன் பார்ப்பீர். அவர்கள் வியாக்கரபாத முனிவரும் மற்றொருவர் பதஞ்சலி முனிவரும் ஆவர். வியாக்கரபாத முனிவருடைய திருமகனர் உபமன்யு முனிவர் ஆவர். உபமன்யு சின்னஞ்சிறு வராய் இருந்தபோது தமக்குப்பால் வேண்டுமென சிவபெருமானை நோக்கித் தவம் செய்தார். இவரது தவத்தைக் கண்டு மகிழ்ந்த சிவபெருமான் திருப்பாற் கடலையே உண்டு கொண்டிருக்குமாறு கொடுத்து விட்டனர். திருப்பாற்கடல் திருமால் பள்ளிகொண்டிருந்த இடம் ஆதலின் இனி அங்கிருந்து காலி பண்ண வேண்டிய நிலை திருமாலுக்கு ஏற்பட்டுவிட்டதால் தன் மனைவியாகிய லட்சுமியைப் பார்த்து லட்சுமி நம் இடத்தைச் சிவபெருமான் புலிக்குட்டியாகிய உபமன்யுவுக்குக் கொடுத்து விட்டார். இதைக்கேட்டதும் என் மனம் நடுக்கம் உற்றது. இன்னது செய்வதென்று,

அறியாததனுல்கை கால் வரவில்லை. ஆகையால் என்னை இடுக்கித் தழுவிக்கொள். நம் பாயையும் சுருட்டிக் கொள். சாட்சிக்காரன் காலில்விழுவதை விடச் சண்டைக்காரன் காலில் விழுவது நல்லதாத லால் சிவபெருமானிடத்தில் சென்று முறையிட்டுக் கொள்ளலாம். ஆகவே அவர் ஆனந்தக் கூத்தாடும் பொன்னம்பலத்திற்குப் போவோம் என்னும் பொருள்களை எல்லாம் பொதியும்படி,

தடக்கட லில்பள்ளி கொள்ளுவம் யாம் அதைச் சங்கரனர்
அடற்புலிக் குட்டிக் களித்தன ரால் அது கேட்டுநெஞ்சம்
நடுக்கம துற்றது கைகால் எழா; நளினத்தி **யென்னை**
**இடுக்கடி பாயைச் சுருட்டடி ஏறடி அம்பலத்தே**

எனப் பாடினர். காலட்சேபம் கேட்க வந்தவர்களுள் போகாமல் இருந்தவர்கள் கொல்லென்று நகைத்தனர். பாகவதருக்கு மனம் துணுக்குற்றது.

---

# அத்தமிக்கும்போது அரிசி வரும்.

—:o:—

சத்திரம் எனினும் விடுதி என்றாலும் ஒன்றே. இரண்டும் உண்ண உணவும் இருக்க இடமும் தரவல்ல இடங்கள். இது பழங்கால முதற் கொண்டு அவ்வவ்வூர்களில் பொது இடமாகக் கட்டப்படுவது. ஏனெனில் யாத்திரை மார்க்கமாக வருபவர் தங்கட்கு உறவினரோ நண்பரோ இல்லாதபோது அவ்வவ்வூர் சத்திரங்களில் தங்குவர்.

இப்படி அமைந்த சத்திரங்களில் நாகப் பட்டினத்தில் இருந்த ஒரு சத்திரத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியே இங்கு குறிப்பிடப்போவதாகும்.

நாகப்பட்டினத்தில் ஒரு சத்திரம் இருந்தது. அச் சத்திரத்தைத் தன் இருப்பிடமாகக் கொண்டு காத் தான் என்னும் பெயரிய ஒருவன் சாப்பாட்டு விடுதி யாக (ஓட்டலாக) நடத்திவந்தான். அவன் பெரும் பணக்காரனுக இல்லாமையால் தருமத்திற்கு உணவு போடாமல் காசு வாங்கிக் கொண்டு வருபவர் போப வர்கட்கு உணவு அளித்து வந்தான். அவன் சமையல் கொஞ்சம் நல்ல முறையில் அமைந்திருந்ததால் அவன் பாடு கொஞ்சம் கிராக்கியாகவே இருந்தது. கூட்டம் அதிகம் சேருவதுண்டு. இப்படிக் காத்தானது வியா

பாரம் நாளுக்கு நாள் ஓங்கி வந்ததால், பணமும் கொஞ்சம் சேர்ந்து வந்தது. 'முந்திரிமேல் காணி மிகுவதாயின் தன்னை இந்திரனா எண்ணி விடும்' என்பது இயற்கைதானே. அந்த முறையில் சிறிது கர்வங் கொண்டு ஓட்டலுக்கு வருபவரை நன்கு கவனியாமல் நடந்து கொண்டான்.

காத்தான் இவ்வாறு நடந்து வரும் காலத்தில் காளமேகப் புலவர் ஒருநாள் அவ்விடுதிக்குப் போய் உணவு கொள்ள நேர்ந்தது. புலவர் பகல் 11-மணிக்கு போயும் பிற்பகல் இரண்டு மணிவரையிலும் இவருக்கு உணவு படைக்கக் காத்தான் ஏற்பாடு செய்யவில்லை. இவர் புலவர் என்பது அவனுக்குத் தெரியாது. புலவர் என்ன ஐயா இன்னமுமா சாப்பாடு ஆகவில்லை, பசி போனபின் சாப்பிட்டு என்ன பலன்? அரும்பசிக்கு உதவா அன்னம் பயனில்லை என்றன்றோ எல்லோரும் கூறுவர் என்று கேட்டபோது, சும்மா இரும் ஐயா, மற்றவர்களுக்குப் போட்ட பிறகுதான் உனக்குப் போடமுடியும் என்று கத்தினன். புலவர் பார்த்தார். கோபம் வந்து வந்துவிட்டது. இவனுக்குச் சரியான புத்திவரப் பண்ணி இவனது சாப்பாட்டு வியா பாரத்தைக் கெடுக்க வேண்டும் என்று எண்ணியவ ராய், அங்கிருந்த ஒரு கரித்துண்டை எடுத்து சத் திரத்தின் வெளிச் சுவரில் எல்லோரும் பார்க்கக் கூடிய நிலையில் பெரிய கொட்டை எழுத்தில் இந்த நாகபட்டினக் காத்தான் சத்திரத்தில் சூரியன் அஸ்தமிக்கும் போதுதான் அரிசி வரும். பிறகு அதைக் குத்தி உலையில் போடுவதற்குள் இருட்டி

ஊர் அடங்கி அவர் அவர் உறக்கத்திற்குப் போய் விடுவர். பிறகு அவ்வுலையில் பெய்த உணவை எடுத்து இலையில் போடுவதற்குள் வெள்ளி முளைத்துவிடும் (அதாவது பொழுது விடிந்துவிடும்) என்னும் பொருளில்,

கத்து கடல் சூழ் நாகைக் காத்தான் தன் சத்திரத்தில்
**அத்தமிக்கும் போதில் அரிசிவரும்—குத்தி**
உலையிலிட ஊரடங்கும் ஓர் அகப்பை அள்ளி
இலையிலிட வெள்ளி எழும்.

என்று பாடி முடித்தார். இதற்குள் சத்திரக் காரன் வந்து சுவரைப் பார்த்துப் பாட்டின் பொருளைத் தெரிந்து கொண்டு இது ஊரெங்கும் பரவினால் தன் சத்திரம் நோக்கி எவரும் வராமல் போவரே என்று அஞ்சினவனாய் காளமேகத்தை வணங்கித் தன் குற்றத்தை மன்னிக்குமாறு வேண்டி முன்னே அவரை அழைத்துச் சென்று ஸ்பெஷல் சாப்பாடு பண்ணி வைத்து உபசரித்து அப்பாடலை மாற்றி நல்ல முறையில் பாடி அமைக்க வேண்டும் என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டான். புலவர் நகைத்து வெளுப்பானுக்கு வெளுப்பான் சாதி வண்ணான் என்று சொல்லிக் கொண்டு, அப்பாடலை நான் மாற்ற மாட்டேன். ஆனால் அதில் ஒரு நல்ல பொருள் தோன்றுமாறு வேண்டுமானால் உனக்குச் சொல்லி வைக்கிறேன். அதைச் சொல்லி உன் வியாபாரத்தைப் பரப்பிக் கொள் என்று சொல்லி, பொது மக்களே! மணி பகல் இரண்டிருக்குமே! காத்தான் சத்திரத்திற்குப் போனால் இந்தவேளையில் என்ன இருக்கும் என்று எண்ணாதீர். சூரியன் அஸ்தமிக்கு வேளை

யானுலும் அரிசி வந்து கொண்டே இருக்கும். அப்படி வருகின்ற அரிசி போதுமானதாக இருக்குமோ இருக்காதோ என்று நினையாதீர். குற்றிக் குற்றி உலையில் போட்டுக் கொண்டே இருக்க, ஊரில் உள்ளவர் எத்தனை பேர் வரினும் அவர்களுக்கெல் லாம் உணவு அளிக்கக் கூடிய அளவு பெருகிக் கொண்டிருக்கும் அப்படி அஸ்தமிக்கும் போது வரும் அரிசியும், மட்டரகமான அரிசியாக இருக்கு மோ என்று எண்ணுதீர். அதனைச் சமைத்து ஓர் அகப்பை இலையில் இட்டால் தூய வெள்ளி போல் வெள்ளைவெளேரென்று மாசுமறு இன்றி விளங்கும் என்னும் பொருளையும் சொல்லிக் கொடுத்தார். காத்தானுக்குப் பரம சந்தோஷம் ஏற்பட்டது. அங்கு வந்திருந்த எல்லோரும் அந்தப் பாடலில் இரு பொருளையும் உணர்ந்து சிரிப்புக் கடலில் மூழ்கினர். காத்தானும் அந்தப் பாட்டின் பொருளைப் பலருக்கு விளக்கிக்காட்டித்தன் வியாபாரத்தைப் பெருக்கிக் கொண்டு வந்தான்.

---

UNIVERSITY EXTENSION LIBRARY
MADURAI

# பெண் வேண்டும் என்றால் யாரும் கொடார்

நாம் எல்லோரும் பிள்ளையாரை எங்கும் பார்க்கிறோம். அவர் இல்லாத இடமே இல்லை. சந்து பொந்துகளிலும் தோட்டம் துரவுகள் தோறும், குளம் குட்டைகள் எல்லாமும், பிள்ளையார்தான். எந்தக் கோவில்களுக்குச் சென்றாலும் அங்கும் முதலில் இருப்பவர் கணபதியே. அக் கோவில்கள் பிள்ளையார் கோவில்களாக இருக்க வேண்டிய அவசியமே இல்லை. சிவன் கோவிலாயினும் சரி, விஷ்ணு கோவிலாயினும், மாரியம்மன் கோவிலாகிலும் சரி, வைஷ்ணவர் கோவில்களிலும் இவருக்கு அவ்வைஷ்ணவர்கள் இடம் கொடுத்து, இவர் தும்பிக்கை ஆழ்வார் என்றும் கூறிக் கொண்டு வந்தனை வழிபாடு செய்கின்றனர். எதுவாய் இருந்தாலும் ஆழ்வார் என்னும் சொல் சேர்ந்துவிட்டால் அது பரம வைஷ்ணவமாகிவிடும் என்பது வைஷ்ணவரது கொள்கையாகும். ஆகவே சைவப் பிள்ளையாரையும் தும்பிக்கை ஆழ்வார் என்று சொல்லிக் கொண்டு வைஷ்ணவர் ஆக மாற்றிக் கொண்டனர். எப்படி இருந்தாலும் கணபதி திருமால் ஆலயங்களிலும் இடம்பெற்றிருக்கிறார் என்பது தெரியும்.

இப்படி எங்கும் நிறைந்த பிள்ளையார் ஒரு தோப்பில் ஒரு மரத்தடியில் இருந்தனர். அங்கு பலர் வெயிற் காலங்களில் வந்து ஒதுங்குவது வழக்கம். அப்படி வந்து தம் களைப்பைப் போக்கிக் கொள்ள ஒரு சிலர் தங்கியிருந்தனர். நாலு பேர் கூடிஞல் சும்மா இருக்க இயலுமா? ஏதாகிலும் வம்பு அளந்து கொண்டிருந்தால்தானே பொழுது போகும். ஆகவே அவர்களுள் சிலரே அங்கிருந்த பிள்ளையாரைப்பற்றிப் பேச ஆரம்பித்னர். நல்ல வேளையாக வீண் பேச்சில் ஈடுபடாமல் வேழமுகத்தானைப்பற்றிய பேச்சாக அமைந்தது பாராட்டத்தக்கதுதான். அவனே அவனே என்பதைவிடச் சிவனே சிவனே என்பது நல்லதல்லவா?

கூட்டத்தில் ஒருவர் இருந்து கொண்டு, எந்தச் சாமியும் இந்தக் கணபதி போலக் கண்ட கண்ட இடங்களில் காணப்படுவதில்லையே இவர் மட்டும் ஏன் தெருக்கள் தோறும், சந்துகள் தோறும் குளக்கரை ஏரிக்கரை, ஆற்றங்கரை, தோப்பு துரவுகள் தோறும் உட்கார்ந்து கொண்டிருக்கிறுர்? இதைப்பற்றி ஏதேனும் காரணம் உங்களுக்குத் தெரியுமோ என்னும் விஞவை எழுப்பினர். அங்கிருந்தவர்களுள் ஒருவர், அவர் கொஞ்சம் வயிறுதாரி அதனல் தம் வயிற்றை நிரப்பிக் கொள்ளப் பல இடங்களில் இருந்து கொண்டு முயல்கிறுர், என்றனர். இதைக் கேட்ட ஒரு வயது முதிர்ந்த பெரியவர் ஒருவர், ஐயா நீங்கள் சொல்வது அவ்வளவு பொருத்தமில்லை. ஆனல் நான்என் அனுபவத்தில் கர்ன பரம்பரையாக ஒரு

விஷயம் இவர் எங்கும் உட்கார்ந்து கொண்டிருப்பதற்குரிய காரணமாகக் கூறிக் கொண்டு வருவதைக் கேள்வியுற்றிருக்கிறேன். அதாவது பிள்ளையார் கலியாணம் ஆகாதவர் என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே. தம் தம்பி முருகப் பெருமான் இரு பெண்களை மணந்து கொண்டு வாழவும் தாம் மட்டும் ஏன் திருமணம் செய்து கொள்ளவில்லை தெரியுமா? தமக்கு மனைவியாக வரக் கூடியவள் தம் தாயாராகிய உமா தேவியாரைப் போன்ற நற்குண நற் செய்கையுடையவளாய், தற்காத்தும், தற் கொண்டானைப் பேணியும் தகை சான்ற சொற்காத்தும் சோர்விலாத பெண்ணாக இருப்பவளை மணக்கப் போவார் வருவாரை எல்லாம் கவனித்துத் தேர்ந்தெடுப்பதற்காகவே பல இடங்களில் இருந்துகொண்டு தேடிக் கொண்டிருக்கிறார் என்றனர். இதைக் கேட்டதும் அங்கிருந்தவர்கட்கு மனம் நிம்மதி அடைந்து, இருக்கும் இருக்கும் என்று தம் தம் தலையசைத்து ஒப்புக்கொண்டனர்.

இந்த நிலையில் அந்தத் தோப்பில் அந்தகக்கவி வீரராகவ முதலியாரும் ஒரு துணையாளுடன் வெயிலின் கொடுமையைத் தணித்துக் கொண்டு களைப்பாற வந்து தங்கி இருந்தனர். அங்கிருந்த கூட்டத்தினர் கணபதியைப் பற்றிப் பேசிக் கொண்டதைக் கேட்டுக் கொண்டிருந்தார். தாம் கவிராயர் ஆதலால் தாமும் ஏதேனும் இதைப் பற்றிக் கூற வேண்டும் என்று எண்ணினர். குதிரை குருடாக இருந்தாலும் கொள் தின்பதில் குறைவில்லை என்று கூறுவது போல,

தாம் பிறவிக் குருடராகப் பிறந்திருந்தும் குறும்பு மட்டும் இவரை விட்டுப் போகவில்லை. ஆனால் இவரைப் போன்ற நல்லறிஞர் செய்யும் குறும்பு அறிவுக்குப் பொருத்த முடையதாய் பொருள் நிறைவுடையதாய் இருக்கும்.

ஆகவே, தாம் இருந்த இடத்தில் இருந்து கொண்டே, வீரம் மிக்க பிள்ளையாரே! உனக்குப் பெண் வேண்டு மென்றால் யார் கொடுப்பார்கள்? யாரும் கொடுக்க முன் வரமாட்டார். உங்கள் தகப்பனர் பெரிய பணக்காரரா என்ன? அவர் ஒரு பிச்சைக்காரர்தானே, உன் தாய் மாமன் எப்படிப் பட்டவன் என்பது எல்லோருக்கும் தெரியுமே. அவர் வெண்ணெய், பால், தயிர் முதலிய வற்றைத் திருடி யுண்ணும் திருடனயிற்றே. உன் தாய் இருக்கின்றாளே உமா தேவியார் அவள் சுத்த நீலியல்லவா? (நீல நிற முடையவள் என்பது தான் பொருளாயினும் பொய்யாக நடிக்கும் பெண்களுக்கு இச் சொல் வழங்கப் பட்டு இழிவு படுத்திக் கூறும் உலக வழக்கை நோக்கி இவ்வாறு கூறினர்) உன் தம்பி குமரன் எப்படிப் பட்டவன், கடம்பன் தானே? (கடம்ப மாலை அணிந்தவன் என்னும் பொருளோடு தீங்குள்ளவன் என்னும் பொருளும் தொனிக்க இவ்வாறு கூறினர்) நீயும் உன் பெற்றோரும் இருக்கும் வீடாகிலும் நாட்டிலோ, நகரத்திலோ உண்டா, நீங்கள் வாழ்வது திருச்செங்காடு அல்லவா? (இறைவர் எழுந்தருளியுள்ள திருப்பதிகளில் இது ஒன்று) இவைகள் எல்லாம் ஒருபுறம் இருக்கட்டும். உங்கள் விஷயமாகக் கூறினலும் உமக்கு

உடல் அழகுண்டா? தொப்பையும் தொந்தியுமாகப் பெரிய வயிற்றைப் போட்டுக் கொண்டிருக்கிறீரே? ஆகையால் பெண் வேண்டும் என்ற ஆசையை மறந்து விடும் என்னும் பொருளழகு தோன்ற,

வீரஞ் சொரிகின்ற பிள்ளாய்! உனக்குப் பெண் வேண்டும் என்றால்

ஆருங் கொடாருங்கள் அப்பன் கபாலி அம்மான் திருடன்
ஊருஞ்செங் காடு நின் தன்முகம் யானை; உனக்கிளையோன்
பேருங் கடம்பன் உன் தாய் நீலி நிற்கும் பெருவயிறே,

என்று எடுத்துப் பாடினர். இதைக் கேட்டவர் அந்தகக் கவிராயரது அறிவையும் ஆற்றலையும் போற்றிப் புகழ்ந்து பெரு நகை கொண்டனர்.

—:o:—

# மூதேவி ஏன் பிறந்தாள் முன்.

---

"திரை கடல் ஓடியும் திரவியம் தேடு" என்பது ஒரு பழமொழி. இப்பழமொழியின் திரண்ட கருத்துச்சோம்பித் திரியாமல் பொருள் அல்லவரையும் பொருளாகச் செய்யக்கூடிய பொருளை எவ்வாறேனும் பாடு பட்டுத் தேடிக் கொள்ள முயற்சி செய். அம்முயற்சி உள்ளூரில் பலிக்கவில்லை என்ருலும் வெளி நாடுகளுக்குச் சென்றேனும் தேடப்பார் என்பதே ஆகும்.

இப்படிச் சேர்த்த பொருளைத் தன்னளவில் தன் குடும்ப அளவில் செலவிட்டுக் கொள்ளாமல் தன்னுல் ஆன உதவியைப் பிறர்க்கும் செய்ய அப் பொருளைப் பயன் படுத்துவதே மக்களாகப் பிறந்த தன் பயனுகும். செல்வத்துப் பயனே ஈதல் என்று நம் முன்னோர் பொருட் பயனை நமக்கு நன்கு எடுத்துக் கூறியுள்ளார். அப்படி ஏழை எளியவர் கட்குக் கொடுப்பதனுல் ஒரு பெருமகிழ்ச்சி உண்டாகிறது என்றும் அம் முன்னோர் கருதி இருந்தனர். 'ஈத்து உவக்கும் இன்பம்' என்றே திருவள்ளுவர் கூறி இருக்கின்றனர். அதனுல்தான் இச்செல்வத்தைப் பெற்ற சீரியர் சிலர், ஏழை எளியவர்கட்கு உதவி புரிந்து வருகின்றனர்.

இவ்வாறு செல்வத்தினை நன் முறையில் திரட்டி அதன் பயனையும் நன்குணர்ந்த வள்ளல் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் திருவேங்கடேசன் என்னும் திருப்பெயர் பெற்றவர். அவர் தமிழ்ச்சுவை அறிந்த அன்பர். தமிழ்ப் புலவர்கட்கு வேண்டிய உதவிகளைச் செய்து வந்தவர்.

இரட்டைப் புலவர்கள் இவ்வள்ளலது அருமை பெருமைகளைக் கேள்வியுற்று அவரைக் காணப் புறப்பட்டு வந்தனர். திருவேங்கடேசர் புலவர் பெருமக்களை நன் முறையில் வரவேற்று, அவர்களது புலமையை வியந்து இரண்டொரு நாள் தம் இல்லத்திலேயே வைத்து உபசரித்து வந்தனர்.

இரண்டு நாள் கழித்துப் புலவர்கள் தாம் அவ்விடம் விட்டுக் கிளம்ப விடை கேட்கையில், திருவேங்கடேசர் புலவர்கட்கு நல்ல முறையில் சன்மானம் செய்து அனுப்ப எண்ணங் கொண்டார். இந்தச் சமயத்தில் இவரது தமையன் கண்ணுக்கினியான் என்னும் பெயரினன், தன் தம்பி இப்படிப் புலவர்கட்குக் கொடுத்து வெகுவிரைவில் ஓட்டாண்டி ஆய்விடுவான் போல இருக்கிறதே என்று எண்ணித் தம் தம்பியை நோக்கி, "தம்பி திருவேங்கடேசா" புலவர்களை இரண்டு நாள் வைத்து உணவு அளித்ததே போதுமானது. இன்னமும் பொருள் உதவி புரிய வேண்டுமோ? வேண்டா வேண்டா' என்று கொடுக்காதவாறு தடை செய்துவிட்டான்.

இப்படிப் பிறர் கொடுப்பதைத் தடுப்பதைப் போன்ற தீய செயல் வேறு எதுவும் இல்லை. கொடுக்காமல் வேண்டுமானாலும் இருக்கலாம். ஆனால் பிறர் கொடுப்பதை மட்டும் தடையே செய்யக் கூடாது. நாயனார் இதை வன்மையாக எடுத்துக் கண்டித்தும் இருக்கிறார். எவன் ஒருவன் பிறர்க்குக் கொடுப்பதைத் தடை செய்கிறானோ அவனும் அவன் குடும்பமும் உடுக்க உடையின்றி உண்ணச் சோறும் கிடைப்பது அருமையாகி வருந்துவர், என்றே கூறிக் கண்டித்துள்ளார். இதை அந்தக் கண்ணுக்கினியான் கவனிக்கவே இல்லை. அவன் கண்ணுக்கினியனாய் இருந்தானே அன்றிச் செயலிலே குணத்திலே இனியனாகவே இருக்கவில்லை. இப்படிப் பொருத்த மற்றவர்கட்கும் பெயர் நல்லமுறையில் அமைவது சுடுகாட்டை நன் காடு என்றும் மங்களமான செயல் ஒன்றையும் செய்வதற்குப் பொருத்தமில்லாத நாளை மங்களவாரம் என்றும், காராட்டை வெள்ளாடு என்றும் கூறுவது போலாம்.

திருவேங்கடேசன் என் செய்வார்? தான் செல்வத்திற்குரியனாயினும் தன் முன்னோரான தமையன் பேச்சைக் கேட்க வேண்டியவனானான். ஆகவே புலவர்கட்குப் பொருளைத்தரப் பின் வாங்கிவிட்டான். இதை இரட்டையர் அறிந்து உடனே கண்ணுக்கினியானுக்கு அறிவு கொளுத்த ஒரு அருங்கவி பாடத் தொடங்கினர். அவர்கள் பாட்டுத்தான் இருவர் கருத்தும் அடங்கிய பாட்டாயிற்றே! அப்பாட்டில் நல்ல வார்த்தைகளைப் பேசி உபசரிக்கும் திருவேங்

கடேசன் உடன் பிறப்பாக இந்தக் கண்ணுக்கினி யான் ஏன் பிறக்க வேண்டும் என்னும் கேள்வி எழுப்பி, திருப்பாற் கடலில் ஸ்ரீதேவி பிறந்தபோது கூட மூதேவி பிறக்கவில்லையா? அது போல நல்ல வனை திருவேங்கடேசனோடு தீயவனை கண்ணுக் கினியான் பிறந்தான் என்னும் பொருள் தொனிக்க

தேன் பொழியும் வாயான் திருவேங்கடேசனுடன்
என் பிறந்தான் இந்த இனியான்காண்—யான்சொலக்கேள்
சீதேவி யார் பிறந்த செய்யதிருப் பாற்கடலுள்
மூதேவி ஏன் பிறந்தாள் முன்?

என்று பாடினர்கள். இதைக்கேட்ட கண்ணுக் கினியான் தன் தவற்றைஉணர்ந்து மன்னிக்குமாறு புலவர்களை வேண்டித்தன் இளவலிடம் கூறிப் பொருள் உதவுமாறு பணித்தான். அவனும் உதவினன்.

—:o:—

# ஆட்டைவிட்டுப் புலி போகுமா?

—:o:—

விலங்குகளில் புலி மிகக்கொடியது. தனக்குப் பசி இருந்தாலும் இல்லாமற் போனாலும் தன் கண்ணில் கண்டதை உடனே அடித்துக் கொல்லும் தன்மையுடையது. சிங்கம் பசித்தால் அன்றித் தன் எதிரில் பட்ட விலங்கை அடிக்காதாம். ஆகவே புலி மிகவும் கொடுமை வாய்ந்தது என்று தெரிகிற தல்லவா? அதிலும் ஆட்டையும்மாட்டையும் கண்டால் புலிக்கு ஆனந்தம். அவற்றின் இறைச்சியின் மீது அவ்வளவு ஆசை. ஆட்டைக் கண்டால் விடாது. அடித்தேவிடும். இது உலகறிந்த உண்மை. இந்த உண்மையை அடிப்படையாகக்கொண்டு காளமேகம் ஒருகவி புனைகிறார்.

காளமேகப் புலவர் சிதம்பரத்திற்கு வந்தார். சிதம்பரம் நடராசப் பெருமான் நடனம் புரியும் பொன்னம்பலத்தைக்கொண்டதல்லவா? காளமேகப் புலவர் பொற்சபை முன்வந்தார். கூத்தரசனைக் கூர்ந்து நோக்கினார். நடராசப் பெருமானது தோற்றம் நடனம் புரிவது போன்ற தோற்றம் அன்றோ? அபிநயக்கைகளும், ஆட் எடுத்த திருவடியுடனும் அழகுடன் இருப்பதைக் கவனித்தார். அவ்வுருவத்

தின் முன் இரு முனிவர்கள் கை குவித்து வணங்கி நிற்பதையும் கண்டார். அம்முனிவர்களுள் ஒருவர் பாம்பு வடிவினர், மற்றொருவர் புலிக்காலினர். பாம்பு வடிவரைப் பதஞ்சலி முனிவர் என்றும், புலிக்கால் முனிவரை வியாக்கர (புலி) பாத முனிவர் என்றும் கூறுவர். காளமேகத்தின் கருத்து புலிக்கால் முனிவர் பால் சென்றது. அவரையும் உற்று நோக்கினர். ஆடல் அரசையும் அன்புடன் பார்த்தனர். இருவர் செயலேயும் இணைத்துப்பாட காளமேகத்தின் கருத்து எழுந்தது.

சிதம்பரேசனைப் பார்த்து, தில்லைச்சிவனே நாட்டில் உள்ள ஆட்டுக்கு நான்கு கால்கள்தான்; அது எல்லோருக்குந்தெரிந்ததே. உம்முடைய ஆட்டுக்கு (கூத்துக்கு) இரண்டுகால்தான் என்றாலும், புலி எப்படி ஆட்டைவிட்டுப் போய்விடும்? அதை நன்கு சுவைத்துப் பார்க்கக் காத்துக்கொண்டுதானே இருக்கும் என்று பொருள் படும்படி,

> நாட்டுக்குள் ஆட்டுக்கு நாலுகால் ஐயாநின்
> ஆட்டுக்கு இரண்டுகால் ஆனாலும்—நாட்டமுள்ள
> சீர்மேவு தில்லைச் சிவனேஇவ் வாட்டைவிட்டுப்
> **போமோ சொல்லாய் அப் புலி.**

இதன் கருத்து ஆட்டைவிட்டு (நடன தரிசனத்தைக் காண்பதைவிட்டு) புலி (வியாக்ர பாத முனிவர்) போகுமா என்பது.

—:o:—

# தலைச்சவரம் பண்ணுவதேன்?

—:o:—

நம் உடல் வளர்ச்சியில் இடைவிடாது வளர்வது ரோமம். அது வழிக்க வழிக்க அந்த அளவுக்கு நின்று விடுவதன்று. தலை முடியை அழகுபட வழித்து அலங்கரிப்பது முற்கால வழக்கமாக இருந்தது. இவ் வழிப்புப் பல திறப்படும். அவற்றுள் சில தலை முடி முழுமையும், வழித்து விடுதல். இதையே நாம் மொட்டை அடித்தல் என்கிறோம். உச்சியில் மட்டும் ஒரு கற்றை ரோமத்தை வைத்துக் கொண்டு ஏனைய பகுதிகளின் முடியைக் களைந்தெறிதல், இதனை உச்சிக் குடிமி வைத்தல் என்போம். ஒரு சிலர் தலையின் முன் பகுதி முடியை மட்டும் மழித்துக் கொண்டு பின் பகுதியை நீள வளர்த்து முடிந்து கொள்வர். இதனைத் தஞ்சாவூர்க்குடிமி என்று கூறுவர். வேறு சிலர் முன் பகுதி ரோமங்களை மட்டும் வழித்துக் கொண்டு பின் பகுதியைக் கத்தரித்துக் கொள்வர். இத்தலை மொட்டந்தலையும் அன்று, முடிச்சுத்தலையும் அன்று. இந்த வகைகளுக் கெல்லாம் இக் காலத்தில் வேலை இல்லை. எல்லாம் கிராப்புத்தலை. இளையர் முதல் விருத்தர் வரையிலும் இம் முறையில் தலை முடியைத் திருத்துவதிலேயே நாட்டமுடையவர். வைதிகர்களும் இதில் நாட்டமுடையவர் என்றால் வேறுகூறுவானேன்? இது நிற்க.

திருவண்ணுமலையில் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் பெயர் சம்பந்தாண்டான் என்பது. அவர் சிறந்த செல்வர். அவரைக்கான இரட்டையர்கள் என்னும் இருபுலவர்கள் சென்றிருந்தனர். இவர்களில் ஒருவர் குருடர், மற்ருெருவர் முடவர். இவர்கள் எங்கு சென்ருலும் இணைந்தே செல்வர். முடவர் குருடர் தோளில் ஏறிக்கொள்வர். இருவரும் உறவு முறையில் ஒன்று பட்டிருந்தமையால் குருடருக்கு முடவரைச் சுமப்பதில் வருத்தம் ஏற்படவில்லை. இவர்கள் உடல் உறுப்பில் குறைந்தவர்களே அன்றி, அறிவாகிய உறுப்பில் ஒரு சிறிதும் குறைந்தவர்கள் அல்லர். கவி பாடும் வன்மை இவ்விருவர் பாலும் அமைந்திருந்தது. ஆனல் இவர்கள் பாடும் விசித்திரம் சிறப்பானது. ஒருவர் அரைப்பாட்டுப் பாடுவார். மற்றவர் மற்றைய அரைப் பாதியைப் பாடிப் பாட்டை முடித்து வைப்பார். இருவர் பாடிய ஒரு பாடலாக இருப்பினும் சொல் நயம் பொருள் நயம் குறைந்து காணப்படாது.

இவ்விரு புலவர்களும் சம்பந்தாண்டான் செல்வ நிலையை அறிந்தவர் ஆதலின், அவரைக் கண்டால் தமக்கு ஏதேனும் பொருள் உதவி கிடைக்கும் என்னும் நோக்கத்தோடேதான் அவரிடம் சென்றிருந்தனர். இவர்கள் சென்ற வேளை சம்பந்தாண்டான் நாவிதனைக் கொண்டு தம் வீட்டுத் திண்ணையில் தலைச்சவரம் செய்து கொண்டிருக்கின்ற நேரம். எந்த நேரமாயினும் என்ன தம்மை நோக்கி வந்தவர்களை 'வருக' என்று உபசரிக்க வேண்டியது மக்களாகப்

பிறந்தவரது கடமை அல்லவா? வந்தவர், தமக்கு முன் பின் அறியாதவர் என்றாலும் கவலை இல்லை.

சம்பந்தாண்டான் செல்வன் ஆனதால் வந்தவர்களைச் சிறிதும் பொருட்படுத்தவில்லை. அவர்களை யாரோ பிச்சைக்காரர்கள் என்று எண்ணி விட்டான். அவன் என்ன செய்வான். அவனது செல்வச் செருக்கு அவனை அவ்வாறு செய்து விட்டது.

சிறியரே மதிக்கும் இந்தச் செல்வம் வந்துற்ற காலை
வறியபுன் செருக்கு மூடி வாயுளோர் மூகர் ஆவர்
பறியணி செவியுளாரும் பயிரறு செவிடர் ஆவர்.
குறிபெருங் கண்ணுளாரும் குருடராய் முடிவர் அஃதோ

என்றல்லவோ கீழ்த்தரச் செல்வரைப் பற்றிய செய்யுளும் எழுந்தது.

இரட்டையர்கள் சிறிது நேரம் இருந்து பார்த்தார்கள். சம்பந்தாண்டான் இவர்களை வரவேற்பதாகக் காணோம். இவனை அவமானப்படுத்த வேண்டும் என்று இரு புலவர்களும் மனத்தில் தீர்மானித்து விட்டனர். இவ்வவமானம் அந்த நிலையிலேயே, அவன் தலைச்சவரம் பண்ணிக் கொள்ளும் நேரத்திலே உண்டாக்க வேண்டுமென்று உடனே முடமாய் இருக்கின்ற புலவர், ஒரு கேள்வியை எழுப்பினார். அதாவது 'இந்தத் திருவண்ணாமலை என்னும் க்ஷேத்திரத்தில் வாழ்கின்ற சம்பந்தாண்டானுக்கு, இந்நாவிதன் ஏன் தலைச்சவரம் பண்ணவேண்டும்?' என்பது. உடனே சிறிதும் தாமதிக்காமல் குருட்டுப் புலவர், இது தெரியாதோ உமக்கு, இவன் தலைச்சவரம்

பண்ணிக் கொள்ளாமல் இருந்தால் இவனுடைய குடுமியைப் பெண்கள் பிடித்து இழுத்து தலையை வளைத்து சிரத்தில் குட்டாமல் இருப்பதற்காகவே இவ்வாறு தலைச்சவரம் செய்து கொள்கிறன் என்று பாடி முடித்தார். அப்பாடல்,

மன்னுதிரு அண்ணு மலைச்சம்பந் தாண்டாற்குப்
பன்னுந் தலைச்சவரம் பண்ணுவதேன் ?—மின்னின்
இளைத்த இடை மாதர் இவன் குடுமி பற்றி
வளைத்திழுத்துக் குட்டாம லுக்கு

என்பது.

இப்பாடலைக் கேட்ட நாவிதன் தான் சவரம் செய்வதையும் நிறுத்தி விட்டுக் கத்தியை மடக்கிக் கீழே வைத்து விட்டு வயிறு குலுங்கக்குலுங்க நகைத்தான். சம்பந்தாண்டானுக்குப் பெரிதும் அவமானம் ஆகிவிட்டது. அப்போதுதான் வந்த இருவர்கள் பெரும் புலவர் என்று உணர்ந்து கொண்டான். தான் அவர்களை மதியாமல் அசட்டையாய் இருந்தது, பெருந் தவறுதான் என்று கூறித் தன்னை மன்னிக்குமாறு வேண்டி வணங்கினன். அவர்களை நன்கு உபசரித்து அவர்கள் விரும்பியவாறு பரிசில் தந்து அனுப்பினன்.

—:::—

# சோறுகண்டமூளி யார் சொல்.

—:0:—

நம் நாட்டில் கோயில் பூசைகள் எவ்வாறு நடக்கின்றன என்பது உங்கட்குத் தெரியும். திருவிழா, பெருவிழாக் காலங்களில் அபிஷேக அலங்கார, நிவேதனங்கள் வெகு சிறப்பாக நடக்கும். ஏனைய காலங்களில் நித்த பூசையாகிய சிறு நிவேதனங்கள் மட்டும் நடைபெறும். இது பெருங் கோயில்களாயின் ஒரு நாளைக்கு ஆறு கால பூசையாகவும், நடுத்தரக் கோயில்களாயின் காலை, பகல், மாலை ஆகிய முக்கால பூசையாகவும், சிற்சில கோயில்களில் பகல் ஒருபோது பூசையாகவும் நடந்துவரும். எல்லாம் அவ்வக்கோயில்களின் பொருளாதார நிலையைப் பொறுத்ததாகும். அதற்கேற்பப் படித்தரங்களும் வேறு படும். அப்பூசா காலங்களில் கோயிலில் எழுந்தருளியுள்ள கடவுளுக்கு அரிசி உணவு பொங்கி நைவேத்தியம் செய்வர்.

இவ்வாறு நடக்க வேண்டிய முறைகளின் கீழ் அமைந்த கோயில் ஆங்கூர்க் கோயில் ஆகும். இதற்குப் பெருவாரியான பொருள் வருவாய் இல்லை என்றாலும் நித்தலும் நடக்க வேண்டிய பூசைகட்குரிய செலவினங்களைச் சரிகட்டக் கூடிய வரவிற்கு யா

தொரு குறையும் இல்லை. தினமும் இருகால பூசை இடை யீடின்றி நடை பெறும்.

இவ்வாங்கூர் கோவில் குருக்கள் நல்லவர் இல்லை. அவர் கடவுட் பூசைக்குக் கொடுக்கும் அரிசிப்பண்டத்தைத் தம் வீட்டிற்கு அனுப்பி விட்டு, சுவாமியைப் பட்டினி போட்டு வந்தனர். ஆனால் பார்ப்பவர்கட்கென்னவோ வேளை தவறாமல் பொங்கல் படைத்து ஆண்டவனுக்குப் பூசை நடக்கிறது என்பது தெரியும் முறையில் பூசைக் காரியங்கள் நடந்து வந்தன. அவ்வளவு தந்தரமாகக் குருக்கள் பூசையை நடத்தி வந்தனர்.

கோவிலில் மேளதாளங்கள், கொட்டு முரசுகள் பூசை வேளையில் ஒலித்துக் கொண்டுதான் இருக்கும். சுவாமிக்குத் தண்ணீர் கொட்டி அபிஷேகமும் நடக்கும், அபிஷேகம் முடிந்த பிறகு மடப்பள்ளியிலிருந்து குருக்கள் ஒரு தாம்பாளத் தட்டை ஈரத் துணியால் மூடிக் கொணர்வர். அந்தத் தட்டிலிருந்து ஆவி கிளம்பிக் கொண்டிருக்கும். இதையே சுவாமிக்கு மணியடித்து நிவேதனம் பண்ணுவர். தட்டும் இருந்தது, தட்டின் மீது துணியும் மூடப்பட்டிருந்தது. இடையிடையே ஆவியும் வந்து கொண்டிருந்தது, இதிலிருந்து பார்ப்பவர் என்ன தெரிந்து கொள்வர்? சுவாமிக்குச் சூடாகப் பொங்கல் செய்யப் பட்டுப் படையலுக்குப் போகிறது என்றுதானே எண்ணுவர். ஆனால் உண்மையில் அது பொங்கல் அன்று; அடுப்பில் போட்டு எடுத்த செங்கல், சுட்ட செங்கல் மீது

ஈரத்துணியைப் போட்டால் ஆவி கிளம்பாமல் வேறு என்ன கிளம்பும்? இம் முறையில் ஆங்கூர்க் கோயில் ஆண்டவன் பொங்கலைக் காணமல் செங்கலையே கண்டு வந்தான்; அரசன் அன்று கொன்றால், தெய் வம் நின்று கொல்லும் என்னும் பழமொழிக் கேற்ப இறைவனும் குருக்கள் செய்கையைப் பொறுத்துக் கொண்டே வந்தான். பல நாள் திருடன் ஒரு நாள் அகப்பட்டுக் கொள்வான் என்பது நம் நாட்டுப் பழ மொழிதானே. குருக்களுக்குப் பொல்லாத காலமாக இரட்டையர்கள் ஒரு நாள் அங்கு வந்து சேர்ந்தனர்.

இரட்டையர்கள் புலவர்கள். அவர்கள் ஊர்கள் தோறும், நாடுகள் தோறும் சென்று ஆண்டவனைப் பணிந்தும் அரசர் வள்ளல்களைப் புகழ்ந்தும் இன்ப மாகப் பொழுது போக்குபவர். சோறு கண்ட இடம் சுகமென எண்ணுபவர்.

இவர்கள் ஒரு நாள் பகற்பொழுது ஆங்கூர் வழி யே வந்து கொண்டிருந்தனர். வேளையோ பகல், பசியும் மிகுந்தது, பசியைப் போக்கிக் கொள்ள ஆங் கூர் ஆலயத்துள் நுழைந்தனர்.

ஆலயங்களில் ஆண்டவனுக்குச் சித்திரான்னம் படைப்பதன் நோக்கம் இவ்வாறு யாத்திரை மார்க்க மாக வருபவர்களுக்கு உதவி செய்து பசி தீர்ப்பதற் காகவே யாகும். சிற்சில ஆலயங்களில் கடவுட் பூசைக்குரியது போகத்தினமும் இரண்டொரு யாத்ரிக மக்கள் உண்ணுதற்குரிய உணவு அறுவகைச் சுவை

யுடன் சமைத்துவைத்திருத்தலும், உண்டு. இம்முறை இன்று தென்னாட்டில் பற்பல கோவில்களில் நடைபெற்று வருகின்றன. அறுவகைச் சுவையோடில்லை என்றாலும் புளிச்சோறாகிய புளியோரையோ, தயிர்ச் சோறாகிய ததியோதனமோ ஆலயங்களில் பெரும்பாலும் கிடைக்கும். இத்தகைய காரணங்களைக் கொண்டே இரட்டையர் ஆங்கூர் ஆலயத்துள் புகுந்தனர்.

குருக்கள் வழக்கப்படி தட்டை ஈரத் துணியால் மூடி ஆவிஎழ எடுத்துக் கொண்டு வருவதை இரட்டையருள் முடவர் கண்ணுற்றார். சங்கநாதம் முரசு வாத்திய ஓசை, மேளம் தாளம் எல்லாம் முழங்கிக் கொண்டிருப்பதையும் கவனித்தனர். ஆண்டவருக்குப் பூசையும் முடிந்தது. பூசை முடிந்ததும் தமக்கு ஏதேனும் கொடுப்பரோ என்று காத்துக் கொண்டிருந்தனர். சுவாமிக்குப் பொங்கலைப் படைத்திருந்தால்தானே இவர்கள் எதிர்பார்த்தபடி ஏதேனும் கொஞ்சமாவது கிடைக்கும்.

பொதுவாகப் புலவர்கள் தீர்க்கதரிசிகள் என்னலாம். உண்மையை உணர்ந்து கொள்ளும் ஆற்றல் படைத்தவர்கள். இவர்கள் உள்ளத்தில் ஏதோ சுவாமியின் படையலைப் பற்றி ஐயம் தோன்றியது. சுவாமிக்குப் படைத்தது பொங்கல் அன்று. அது பொய்த் தோற்றப் பொங்கல் என்று உணர்ந்து கொண்டனர். தம் பசியை மறந்தனர். தவறு கண்ட போது திருத்த வேண்டும் என்னும் கொள்கையால்

குருக்கள் செயலை வெளிப்படுத்தி இனியாகிலும் சுவாமிக்கு நல்ல முறையில் நைவேத்தியம் நடப்பதற் கான வழிகோல எண்ணினர். ஆகவே, குருட்டுப் புலவர் சிவபெருமானைப் பார்த்து ஆங்கூர்ச்சிவ, நாங்கள் பசியோடிருக்க நீர் பார்த்துக் கொண்டிருப் பது முறையோ? என்னும் வினாவை எழுப்ப முடப் புலவர், போமையா, சுவாமி செவிக்கு உணவாகிய கொட்டோசை சங்கொலி முதலியவற்றைக் கண்ட வரே அன்றிச் சோறு எங்கே கண்டனர்? அவர் பல நாளாகக் கண்டு வந்தது பொங்கல் அன்று செங்கலே என்னும் பொருளில் அந்தத் தருணத்தில்,

தேங்கு புகழ் ஆங்கூர்ச் சிவனே, வல் ஆளியப்பா
நாங்கள் பசித்திருக்கை ஞாயமோ?—போங்காணும்
கூறுசங்கு தோல்முரசு கொட்டோசை அல்லாமல்
**சோறுகண்ட மூளியார் சொல்**

என்று பாடினர். இதனைக் கேட்ட அங்குள்ளார் உண்மையை ஆராயத் தொடங்கினர். குருக்கள் மோசம் வெளிப்பட்டது. அக்குருக்கள் பரம்பரைக் குருக்கள் ஆதலின், அவரை ஒன்றும் செய்யாது தக்க புத்திமதி கூறி இனி இவ்வாறு செய்யாதீர் என்று அறிவுறுத்தினர். அக்குருக்களும் அன்று முதல் தம் மோசத் தொழிலை மறந்து நேரிய முறை யில் பொங்கல் படைத்து ஆண்டவனை ஆராதித்து வந்தார். இரட்டையரும் ஊராலும் நன்கு உபசரிக் கப்பட்டனர்.

———

# இக்குரங்கு இங்கு ஏன் வந்தது?

—:o:—

இரட்டைப் புலவர்கள் தண்டமிழ் நாடாகிய பாண்டிமா நகரம் வந்துற்றனர். புலவர்கட்குச் சென்றவிடம் எல்லாம் சிறப்பு என்பது பொது மொழி அல்லவா? அவர்கட்கு அரசன் என்றோ ஆண்டி என்றோ வேறுபாடு கிடையாது? எவரையும் காண்பர், எவரையும் பாடுவர். ஆனால் பாடல் மட்டும் புகழ்வும் இகழ்வும் பொருந்தியிருக்கும், நன்முகம் காட்டி நல்வரவு கூறி நனி பொருள் ஈந்தால் நற் பாட்டுக்கள் எழும்; அவ்வாறின்றி உலோபத் தன்மையால் உபசரியாதிருந்தால் வசைப் பாட்டே எழும். இதனால்தான் வள்ளுவர் வாய் மொழியும்,

> வில்லேர் உழவர் பகை கொளினும், கொள்ளற்க
> சொல்லேர் உழவர் பகை.

என்றும் கூறுகிறது. அதாவது வீரர் பால் பகை கொண்டாலும் கொள்ளலாம். ஆனல் புலவர் பால் பகை கொள்ளலாகாது என்பதாம். ஏனென்றால் வீரர் அம்பால் எய்து, புறப்புண் செய்வர். அது பின்னால் ஆறியும்விடும். ஆனல், புலவர்சொல்லம்பால் சுட்டு அகப்புண் செய்து ஆறுவகை புரிந்து விடுவர். இவர்கள் செயலைக் கண்டு அச்சங்கொண்டே

சோழனும் ஒரு சமயம் புலவர் இயல்பைக் கூறும் இடத்து, போற்றினும் போற்றுவர், பொருள் கொடாவிடில் தூற்றினும் தூற்றுவர், சொன்ன சொற்களை மாற்றினும் மாற்றுவர், என்று தெரிந்து கூறியுள்ளான்.

இன்னோரன்ன பண்பு வாய்ந்த இரட்டையர் பாண்டிநாடு சென்றனர். பாண்டியன் அரண்மனைக்கு ஏகினர். புலவர் என்றால் அவர்கள் உள்ளே புகுதற்குத்தடை இராது. அரண்மனையின் அந்தப்புரமும் செல்வர், எந்தப் புரமும் ஏகுவர். ஆகவே இரட்டையர் வாயிலிருந்து கோயில் சென்றனர். புலவர்கள் சென்ற நேரம், அரசன் அந்தப்புரத்தில் அணங்களை யாரோடு அன்புற் றின் புற்றிராது அத்தாணி மண்டபத்து அமைச்சர், தானைத்தலைவர் முதலான தம் அரச சிப்பந்திகளுடன் கொலு வீற்றிருக்கும் காலம். இந்த நிலையில் உள்ள இடத்திற்கு இரட்டையர் சென்றனர். இவர்கள் விசித்திரமான புலவர்கள் அல்லவா? ஏன்? ஒருவர் முடம்; மற்றவர் குருடு அல்லவா? இருவர் வருகையும் திருமால் கருட வாகனத்தில் சேவை தருவது போன்றல்லவா இருக்கும்? இந்தக் கோலத்தில் அரச சபையை அடைந்ததால் மந்திரி அரசனிடம் இப்புலவர்களைச் சிறிதும் மதிக்க ஒட்டாமல் செய்து யாதொரு பரிசிலும் பெறுதற்கு வழி செய்யாது தடை செய்தான். கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம், உடுப்பதும் உண்பதும் இன்றிக் கெடும் என்பதை அவன் உணர்ந்திருந்தும், தன் கெடுமதியால் அதனை மறந்து போயினன். தான் கொடுக்க

இயலா விட்டாலும் பிறர் கொடுப்பதைத் தடுக்கலாமா? அப்படித் தடை செய்தால் தனக்கு இருக்கின்ற உணவும், உடையும் அன்றோ நாளுக்கு நாள் குறைந்து தனக்கு அதே வறுமை வரும்.

மந்திரியின் மதியீனத்தை மதியூகிகளான இரட்டையர் உணர்ந்து கொண்டனர். மந்திரி என்றும் அரசன் என்றும் அவர்கள் சிறிதும் அஞ்சிலர். ஆகவே உடனே முடவர் இந்தத் துன்மதிக்குரங்கு மரத்தில் வாழ வேண்டி இருக்க இந்த அரண்மனையில் இருக்க வேண்டிய காரணம் என்ன என்னும் வினவை எழுப்பினர். இதற்கு விடையாகக் குருடர் இது தெரியாதோ உமக்கு, இந்தக் குரங்கு குலராமன் தூதன் அல்லவா? இது நம் பாண்டிய மகாராசனையும், அவன் தம்பி இளைய பாண்டியனையும் இராம இலக்குமணர் என்று எண்ணி இங்குக் காலந்தள்ள வந்திருக்கிறது என்று பொருள்படும் நிலையில் இருவருமாகச் சேர்ந்து,

புராதன மான தமிழ் புல **வீரிந்தப் புன் குரங்கு**
**மராமரம் விட் டிங்கு வந்த தென்** றேவகை கேட்டிலையோ
தராதலம் வென்ற தமிழ்மாற னையும் தன் தம்பியையும்
இராகவன் என்றும் இலக்குவன் என்றும் இருந்ததுவே

என்று பாடினர்.

இப்பாட்டினை இருவர் எவ்வளவு சுவைபடப்பாடி இருக்கிறார் பாருங்கள். ஒருவனுக்கு வசையாகவும் மற்றவனுக்கு இசையாகவும் அன்றோ இது அமைந்

துள்ளது. பாண்டியனை ரகுகுல திலகனான இராகவனுக்கு ஒப்பிட்டு உயர்வு படுத்தினர். அத்துடன் விட்டனரா, இவ்வுலகை வென்ற வீரர் என்றும் சிறப்பித்தனர். மந்திரியைத்தான் குரங்கு என்றும் கூறி விட்டனரே. இதிலும் ஓர் அழகு வைத்துப் பாடினர். குரங்கைக் குறிக்கும் சொற்களான மந்தி, கடுவன், கவி, மர்க்கடம் முதலானவை இருக்க அத்திரி சொற்களில் ஒன்றைத் தம் திவ்விய கவியில் அமைக்காமல் இயற் சொல்லான குரங்கு என்று குறிப்பிட்டது எவரும் நன்கு அறிந்து கொள்வதற்காகவே யாகும்.

பாண்டியன் இரட்டையரது சமத்காரத்தை நன்கு பாராட்டி நல்ல முறையில் பரிசில் ஈந்தான். மந்திரியும் தன்னைக் குரங்கு என்று கூறியதற்காக வருந்தாது புலவர்களது கற்பனை நயத்திற்கு மகிழ்ந்து அவர்களைப் புகழ்ந்தான்.

—:o:—

# போமோ கோத்திரத்திற்குள்ள குணம்

—:o:—

ஔவையார் முதல் அருள் கவிவாணர்கள் யாவரும் கூறும் வார்த்தைகள் அனுபவ வார்த்தைகள். வெறும் பேச்சுகள் இல்லை. இந்த முறையில் அவ்வம்மையார் ஒரு பாட்டில் கூறுகையில் குலத்தளவே ஆகுமாம் குணம் என்று கூறியிருக்கிறார். இதை உயர் திணைப் பொருள்களிடத்தும் அஃறிணைப் பொருள்களிடத்தும் நன்கு காணலாம்.

அப்பூதி அடிகளார் அப்பர் பெருமானிடத்தில் அளவு கடந்த அன்புடையவராய் இருந்தார். அதிகம் கூறுவானேன். அப்பரையே தம் குல தெய்வமாக எண்ணி இருந்தார். அவ்வாறிருந்தால் அவர் பிள்ளைகள் அவரைப்போலவே இருக்கும் என்று துணிவோடு கூறிவிடலாம். அப்பருக்கு அமுது படைக்க அப்பூதியார் ஏற்பாடு செய்திருந்தார். இதன் பொருட்டு அவரது மூத்த பிள்ளை தோட்டத்தில் சென்று வாழையிலையை அறுக்கும்போது ஓர் அரவு தீண்டிவிட அவன் இறந்தான். இதை அறிந்த அப்பர் தாம் வழிபடும் இறைவரை வணங்கி பதிகம் பாடி எழுப்பினர். எழுந்த மகன் யாது செய்தான்? உடனே அப்பர் பெருமானது திருவடிகளையே சென்று வணங்கினன். இது உயர் திணை யிடத்து

அமைந்த குலத்தளவான குணத்திற்கு ஓர் எடுத்துக் காட்டன்றோ? அவ்வாறே அஃறிணையிடத்தும் காணலாம். வாழைமரத்தைப் பாருங்கள். வாழை வளர்கிறது. வளர்ந்து குலை தள்ளுகிறது. குலை முற்றியதும் குலையையும் அறுத்து எடுத்துக் கொள்கின்றனர். குலைதள்ளிய மரத்தையும் வெட்டி விடுகின்றனர். இதை அத்தாய் மரத்தின் கன்று பார்த்துக் கொண்டுதான் இருக்கிறது. தன் தாய் குலை தள்ளியதும் அதனைப் பிழைக்க ஒட்டாமல் வெட்டி விடுகின்றனர் என்பதை நன்கு தெரிந்து கொண்டுதான் இருக்கிறது. அதனால் அது குலை தள்ளினால் நம்மையும் வெட்டி விடுவர் என்று தான் வளர்ந்து குலை தள்ளாமல் இருக்கிறதா? இல்லை குலை விடுகிறது. இது எதைக் காட்டுகிறது? அஃறிணையிடத்தும் குலத்துக்குரிய குணம் பதிந்திருக்கிறது என்பதன்றோ? ஆகவே கோத்திரத்திற்குள்ள குணம் அக் கோத்திரத்தைச் சார்ந்தவர்க்குப் படிவது என்பதை அறிந்து கொள்கிறோம். இந்தப் பொது இயல்பை அடிப்படையாகக் கொண்டு ஒரு பாட்டுப் பாடவேண்டிய சந்தர்ப்பம் இரட்டைப் புலவர்கட்கு நேர்ந்து விட்டது. ஆனால் அது வேடிக்கைக்காகவும் விநோதத்தின் பொருட்டும் பாடப் பட்டதே அன்றி வேறன்று. அப்பாடலைப் பாடக்காரணம் யாது, அப்பாடல் எது என்பதையும், அறிவோமாக.

இரட்டையர்கள் பெரும் புலவர்கள். அவர்கட்கு யாதும் ஊர் யாவரும் கேளிர். ஆதலின் ஓர் இடத்தில் தங்கி வாழ்பவர் அல்லர். ஆகவே அவர்கள் புறப்

பட்டு வழி நடந்தனர். அப்படி வழி நடந்த ஒரு நாள் பகற் பதினேரு மணிக்கு ஒரு சாலை வழியே போய்க் கொண்டிருந்தனர். வெயிலும் கடுகியது. சாலை ஓரத்தில் ஒரு பிள்ளையார் கோயிலும் அதனை அடுத்து ஒரு குளமும் இருக்கக் கண்டனர். இங்கு நீராடிக் கையில் இருந்த கட்டுணவை உண்டு சிறிது களைப்பாறிச் செல்லத் தீர்மானித்தனர். ஆகவே பிள்ளையார் கோவிலில் தாம் கொண்டுவந்த ஒரு சிறு மூட்டையை வைத்து விட்டுக் குளத்திற்கு இருவரும் சென்றனர். சென்றவர்கள் நீராடி ஆடை தோய்த்துத் திரும்பி வந்து பிள்ளையார் கோவிலில் தாம் வைத்த மூட்டையைத் தேடினர். அம்மூட்டை அவிழ்க்கப் பட்டு அதில் இருந்த சிறு தொகை யாராலோ களவாடப்பட்டிருப்பதைக் கண்டனர். அவர்கட்கு முடிச்சு அவிழ்க்கப் பட்டிருப்பதைப் பற்றியும் அதில் உள்ள பொருள் களவாடப் பட்டிருப்பதைப் பற்றியும் கவலை கொள்ளாமல் பிள்ளையாரைப் பற்றி ஒரு நிந்தாஸ் துதியாகப் பாடும் ஒரு பாக்கியம் கிடைத்ததே என்பதற்காகப் பெரிதும் மனம் மகிழ்ந்தார். புலவர்கள் வறுமையையும் செல்வ நிலையையும் ஒன்ருகக் கவனிப்பவர்கள் அன்றே! ஆகவே அவர்கள் அப்பொழுது, பிள்ளையாரே, நல்லவேலை செய்தீர்! எங்கள் முடிச்சை அவிழ்த்துக் கொண்டீரே! இதைப் பற்றி உங்களைக் குறை கூறி என்ன பலன்? உங்கள் கோத்திரமே திருட்டுக்கோத்திரம். எப்படி என்ருல் உங்கள் தம்பி முருகன் வேடர் வீட்டில் இருந்து வள்ளியம்மையைத் திருடிக் கொண்டு போய்க் கலியாணம் செய்து

கொண்டான். உன் தாய் மாமனை கிருஷ்ணனும் கோபியர் வீட்டில் வெண்ணெய் திருடி உண்டவன் என்னும் பொருளில்,

தம்பியோ பெண் திருடி, தாயா ருடன்பிறந்த
வம்பனோ நெய்திருடும் மாமாயன்—அம்புவியில்
மூத்தபிள்ளை யாரே முடிச்சவிழ்த்தீர் போமோ
கோத்திரத்திற் குள்ள குணம்

என்று பாடினர்.

இப்படிப் பாடக் கேட்ட பிள்ளையாருக்கு மானம் வந்து, அந்த மூட்டை முன்னிலும் பொருள் அடங்கிய மூட்டையாகப் பெருத்து நின்றது. புலவர்கள் இதைக் கண்டதும் பெரு மகிழ்ச்சி கொண்டனர். குருட்டுப் புலவர் மூன்று தோப்புக்கரணம் போட்டு மூன்று குட்டும் தலையில் குட்டி வணங்கினர். முட வருக்குத்தான் தோப்புக் கரணம் போட முடியாதே. தலையில் மட்டும் கையை முடக்கி மூன்று குட்டுப் போட்டுக் கொண்டு வணங்கினர். பிறகு இருவரும் வழிக் கொண்டனர்.

......o......

# சொக்கலிங்கம் உண்டே துணை

—:o:—

தமிழ் வளர்த்த பெரும்பதிகளில் தலை சிறந்தது மதுரையம்பதி. இப்பதி கூடல், ஆலவாய், துவாதா சாந்தத்தலம் முதலான பெயர்களையுடையது. இங்கு உள்ள இறைவர் சொக்கலிங்கப்பெருமான், என்றும் இறைவியார் மீனாட்சியம்மையார் என்றும் பெயர் பெறுவர். இக்காரணத்தால் இறைவர்க்கும் மீனாட்சி சுந்தரேசப் பெருமான் என்னும் பெயரும் ஏற்படுவ தாயிற்று.

மதுரையம்பதி சிறந்த ஸ்தலம் ஆதலின், யாத் திரையின் பொருட்டு எப்பொழுதும் பல்வேறு நாடு களில் இருந்து, பல்வேறு மக்கள் வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருப்பர். இத்தலத்தின் தமிழ்ச் சுவையை அறிந்தின்புறற் பொருட்டே இறைவரும், இறைவியும் குமாரக் கடவுளும் தம் இருப்பிடமாகிய கைலையை விட்டு இங்கேயே குடி ஏறிக் குடித்தனம் செய்வதாகவும் குமர குருபரர் குறிப்பிட்டுள்ளார்.

சொக்கலிங்க மூர்த்தியும் முன்னைப்பழம் பொருட் கும் முன்னைப் பழப் பொருளாவார். எல்லார்க்கும் முன்னே தோன்றி முளைத்தவன். மூர்த்தி விசேடமும் தலவிசேடமும் ஒருங்கே அமைந்த இப் பழம் பதியில் தீர்த்தவிசேடம் இல்லாமற் போகுமா?

தீர்த்த விசேடத்தை விளக்கப் பொற்ருமரைக் குளம் எனப் பெயரிய ஒரு பொற்புடைய குளம் ஆண்டு உண்டு. இக்குளத்தில் இடப்பட்ட சங்கப் பலகை ஒரு தெய்வத் தன்மை வாய்ந்தது. புலவர்களது புலமையைப் பகுத்தறிவதில் ஒப்புயர்வற்றது. நற் புலமையுடையவர்களேயும் நல்லறிவு புகட்டும் நூலேயும் மட்டும் தன்னகத்தே கொண்டு தாங்கி மிதக்கவல்லது. பொய்ப்புலவரையும் பொய் நூலேயும் புறக்கணித்து அப்படியே குளத்தில் தள்ளவல்லது. பல நூல்களே யும், ஒருசேர வைத்து, அவ்வந்நூலாசிரியர்களேயும் தன் மீது இருக்கத் தக்கப் பரப்புடையதாயினும் புலமை குறைந்தவர்களேயும் அவர்களது நூற்களேயும் குளத்தில் தள்ளிவிட்டு நன்னூலேயும் நற்புலவனே மட்டும் தாங்கி அவ்வளவுக்குத் தன் பரப்பையும் சுருக்கிக் கொள்ளும் வன்மை படைத்தது. இப்பலகை ஆலவாய் அவிர்சடைக் கடவுளால் கொடுக்கப் பட்டது. இத்தகைய பலகையைப் பொற்ருமரைக் குளம் பெற்றிருந்ததென்ருல் இத்தீர்த்தத்தின் மகிமையைச் சொல்ல வேண்டுமா? ஆகவே மதுரை யம்பதி, மூர்த்தி தலதீர்த்தமெனும் மூன்று விசேடங் களேப் பெற்றதாகும்.

இம் மூவிசேடமும் பெற்ற முதுபதி நோக்கி இளஞ்சூரியர், முதுசூரியர் ஆகிய இரட்டைப் புலவர் கள் வந்து கொண்டிருந்தனர். இருவர்களுள் ஒருவர் முடம் மற்றவர் குருடு என்ருலும் கவி பாடுதலில் வல்லவர் என்பது நீங்கள் அறிந்ததே. மதுரையை அடைந்தனர். மீனுட்சி

சுந்தரேசப் பெருமானை வணங்கிப் பிறகு மற்றைய காரியங்களைப் பார்ப்போம் என்று கருதினர்.

கோவிலுக்குச் செல்வதானல் குளித்து முழுகித் தூய ஆடை அணிந்து போதல் முறையன்றோ? ஆகவே இருவரும் பொற்றாமரைக்குளத்தில் முழுகிக் கோயிலுக்குப்போக எண்ணினர். இருவர் குளத்தின் படித்துறையை அடைந்தனர். மூடவர் மேற்படியில் உட்கார்ந்துகொண்டனர். குருடர் மட்டும் மெல்லவும் பக்குவமாகவும் படியில் உட்கார்ந்து ஒவ்வொரு படியாய்க்கடந்து நீர் இருக்கும் படியில் ஒரு காலை விட்டு, அதற்கு .மேல் படியில் உட்கார்ந்து கொண்டார். குளிக்கச் சென்றவர்க்கு ஆடையையும் துவைத்துக் கொள்ள ஆசை:ஏற்பட்டது. மெல்லத்தம் மேலாடையை' எடுத்து அதைத் தண்ணீரில் துவைத்து அதில் உள்ள அழுக்குப் போமாறு படியில் தப்பினர். இவ்வாறு இரண்டொரு முறை செய்தார். அடுத்த முறை அத்துணியைத் தண்ணீரில் தோய்த்துக் கையை ஓங்கிப் படியில் தப்ப முயன்ற போது, அவ்வாடை இவர் கையை விட்டு நழுவிவிட்டது.

இந் நிகழ்ச்சியை மேற் படியில் உட்கார்ந்து கொண்டிருந்த மூடப்புலவர் கவனித்து களுக்கென்று சிரித்து, என்ன மைத்துனரே, நீர் சும்மா அந்த ஆடையை நீரில் தோய்த்துத் தோய்த்துத் தப்பினல் அது நம் கையை விட்டுத் தப்பாமல் வேறு என்ன செய்யும் பாவம்! என்று கூற அதைக்கேட்ட குருடப் புலவர் வெட்கப் பட்டு, அவர் சொன்ன

தற்குப் பதிலாக சமத்காரத்தோடு, மாமா அது கந்தை. மேலும் ஆயிரம் பொத்தலுடையது. ஆகை யால் அது போனால் போகட்டும் என்று கூறினார்.

இப்படித் தம் மைத்துனர் கூறியதைக் கேட்ட மூடவர் அது கந்தையானாலும் குளிரையல்லவோ இது வரை தாங்கி நின்றது என்றனர். அதற்கும் சிறி தும் பின் வாங்காத குருடர் இந்தக் கலிங்கம் (ஆடை) போனால்தான் என்ன? நமக்குச் சொக்கலிங்கம் துணையாவார் என்று விடை இறுத்தார்.

இவ்வாறு இவ்விருவரும் உரையாடிக்கொண்டது வசனத்தில் அல்லாமல் பாட்டில் ஆனதால் அப் போது அவர்கள் பாடிய பாடல்கள்,

அப்பிலே தோய்த்திட் டடுத்தடுத்து நாமதனைத்
தப்பினால் நம்மையது தாப்பாதோ—அப்படியே
ஆனாலும் கந்தை அதிலுமோர் ஆயிரங்கண்
போனால் மயிர்போச்சுப் போ
கண்ணாயி ரமுடைய கந்தையே ஆனாலும்
தண்ணார் குளிரையுடன் தாங்காதோ—எண்ணார்
இக்கலிங்கம் போனாலென் ஏகலிங்கம் மாமதுரைச்
**சொக்கலிங்கம் உண்டே துணை**

என்பன.

இவ்விருவரும் இவ்வாறு அசதி ஆடிக்கொண் டிருக்கையில் குருடர் கையை விட்டுச் சென்ற ஆடை யும் சுந்தரேசப் பெருமானது திருவருளால் காற்றால் உந்தப்பட்டுக் குருடர் அருகில் வந்து தட்டுப்பட மூட

வர் மாமா மாமா அதோ சொக்கலிங்கம் அருளால் அக்கலிங்கமும் நும் அருகு வந்துவிட்டது. பிடித்துக் கொள்ளும் என்று கூறக் குருடரும் கையால் தடவிப் பிடித்துக்கொண்டார். இவ்விருவரது பேச்சுக்களையும் அங்கு வந்த யாத்ரிகர்கள்கண்டு இவர்கள் புலமையை வியந்து அவர்களுக்கேற்ற சன்மானம் செய்தனர். அவற்றைப் பெற்று ஆலவாய் அண்ணலையும் அங்கையற்கண் அம்மையையும் பணிந்து சென்றனர்.

———

# வெங்காயம் சுக்கானல் வெந்தயத்தால் ஆவதென்ன ?

—:o:—

எல்லாம் வல்ல முழுமுதற் பரம் பொருளாகிய சிவபெருமானுக்கு, எப்படிப் பஞ்ச பூதஸ்தலங்களாகிய திருவாரூர், திருவானைக்கா, திருவண்ணுமலை, திருக்காளத்தி, திருத்தில்லை சிறந்த திருப்பதிகளாக விளங்குகின்றனவோ அவ்வாறே அவரது இளைய பிள்ளையாகிய முருகப் பெருமானுக்கும் ஆறு திருத்தலங்கள் பெருஞ் சிறப்புடையன ஆகும். இறைவனர் ஐந்து முகமுடைமைக் கேற்ப ஐந்து தலங்களைச் சிறப்புடையனவாகக் கொண்டு விளங்குவது போல் ஆறுமுகங்களோடு குமரன் இலங்குவதால் தனக்கு ஆறு தலங்களைச் சிறப்புடையனவாகக் கொண்டுள்ளான் போலும். அவ்வாறு குமரனது தலங்களை ஆறு படை வீடுகள் என்பர். அவை திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோருடல், பழமுதிர்சோலை என்பன.

**திருப்பரங்குன்றம்** மதுரைக்குத் தென்மேற்கு நாலு கல்தொலைவில் இருப்பது. இது தெய்வ யானையை முருகப் பெருமான் மணந்ததலம். நக்கீரர் திருமுருகாற்றுப்படை என்னும் நூலைப்பாடி பூதத்தைக் கொன்ற பதி.

**திருச்செந்தூர்** இது திருநெல்வேலியில் இருந்து 35 கல் தூரத்தில் உள்ளது. இது கடற்கரையில் கடல் அலை கோவிலின் மதிலில் மோதிக் கொண்டிருக்கும் நிலையில் காட்சி அளிப்பது. அதனால் இது திருச்சீர் அலைவாய் என்றும் பெயர் பெறும். இங்கு ஒரு கிணறு உண்டு. அது நாழிக் கிணறு எனப்படும். அதில் ஒரு சிறு செம்புதான் நுழையக்கூடும். அச் செம்பினின்று எவ்வளவு தண்ணீரை எடுத்தாலும் குறையாமல் முன்னிருந்த நீர் அளவே இருக்கும் பெருமை வாய்ந்தது.

**திருவாவினன் குடி** இதுவே பழனித்தலமாகும் இது திண்டுக்கல் என்னும் இரயில்வே ஸ்டேஷனிலிருந்து 36 கல் தொலைவில் உள்ளது. இங்குக் கீழ் உள்ள கோவிலை திருவாவினன்குடி என்றும் மலை மேலே யுள்ள தலத்தைப் பழனியாண்டவர் கோவில் என்றும் கூறுவர்.

**குன்று தோருடல்** இது குறிப்பிடத்தக்க ஒரு தலம் அன்று. எந்த எந்த மலைமீது முருகப் பெருமான் காட்சி அளிக்கின்றுனே அந்த அந்த இடம் எல்லாம் குன்றுதோருடல் என்று பெயர் பெறும். திருத்தணிகை, மயிலம் முதலியன இத்தலத்தைச் சார்ந்தவை.

**திருவேரகம்** இதுவே சுவாமி மலை என்பது. இது கும்பகோணத்திற்கு நாலுகல் தொலைவில் உள்ளது. இது முருகப்பெருமான் சிவபெருமானுக்கு பிரணவத்தின் பொருளை உபதேசம் செய்தபதி.

அம்முறையில் சிவபெருமான் மாணவராகவும் முருகப் பெருமான் ஆசிரியராகவும் விளங்குதலின் ஆலயமும் கீழே சிவனார் கோயில் கொண்டிருக்க மேலே முருகப் பெருமான் தலமும் அமைந்திருக்கின்றன.

**பழமுதிர் சோலை** இது மதுரைக்கு வடக்கு 12 கல் தொலைவில் உள்ள பதி. இது இப்பொழுது கல்லழகர் கோவில் என்னும் பெயருடன் திருமாலுக்குரிய தலமாகக் கருதப்படுகிறது.

இப்படிப்பட்ட ஆறு படை வீடுகளுள் திருவேரகம் என்னும் சுவாமி மலைக்குச் சொக்க நாதப் புலவர் சென்றிருந்தார். அப்படிச் சென்று முருகப் பெருமானைக். கண்டு தரிசித்தபோது, சண்முகப் பெருமான் புலவர் க்கண்ணுக்கு செட்டியார் குலத்திலகர் போல் காட்சி அளித்தார்.

முருகப் பெருமானும் செட்டிக் குமாரன் என்னும் பெயர் பெற்றவன். ஏனெனில் இவனது தந்தையாரான மதுரை சொக்கலிங்கப் பெருமான் மதுரையில் மாணிக்கம், வளையல் முதலியவற்றை விற்ற வணிகர் ஆவார். அவ்வணிகரது திருமகன் செட்டி மகன்தானே. ஆகவே முருகப் பெருமானைப் பல சரக்குக் கடை விற்கும் செட்டியாராகப் பாவித்து ஒருகவி பாடினார். அக்கவியில் வெங்காயம், சுக்கு, வெந்தயம்,சீரகம், பெருங்காயம் முதலிய சரக்குகளின் பெயரை அமைத்துப் பாடினார். ஆனால் மேல் போக்காக அப்பெயர்கள் பலசரக்குப் பொருள்களின்

பெயராகக் காணப்படினும் வெங்காயம் என்பது கொடிய உடல் என்றும், சுக்கு என்னும் சொல் அவ்வுடல் சுக்கு போல் உலர்ந்து வாடிப் போனல் என்றும், வெந்தயம் என்பது பாட்டில் சேர்ந்துவரும் போது, தீயால் வெந்த அடலால் என்றும் சீரகம் என்பது சிறப்புடைய மோட்ச உலகம் என்றும் பெருங்காயம் என்பது பெரிய உடல் என்றும் வேறு பொருள் தொணிக்கப் பாடியிருப்பதுதான் நாம் படித்துப் பொருள் உணர்ந்து சுவைத்தற்குரிய பகுதி யாகும். அவர் பாடிய பாடல்.

**வெங்காயம் சுக்கானல் வெந்தயத்தால் ஆவதென்ன?**
இங்கார் சுமந்திருப்பர் இச்சரக்கை—மங்காத
சீரகத்தைத் தந்தால் தேடேன் பெருங்காயம்
ஏரகத்துச் செட்டியா ரே.

என்பது.

896
O31:1:9
J5
UNIVERSITY LIBRARY
31 MAY 1957
MADRAS
UNIVERSITY EXTENSION
LIBRARY, MADURAI
Univ. Grants Commission.
UNIVERSITY EXTENSION LIBRARY
16 DEC 1957